# வல்லவர்க்கு வல்லவன்

ஆறும் வகுப்பிற்குரியது


ஆக்கியோன்

**மு. இராமகிருட்டினன், M.A., B.T.,**

தலைமை ஆசிரியர்,

க. நடராச பிள்ளை நினைவு மதுரைப் பிள்ளைமார் சங்கம்
உயர்நிலைப் பள்ளி, மதுரை–16.







பிரசுரகர்த்தர்

**வி. சூ. சுவாமிநாதன்**

14, மேலக்கோபுரத் தெரு, மதுரை-1.

☎ 4206

3/27, பிராட்வே, சென்னை–1. | 128, வெரைட்டி ஹால் ரோடு, கோயமுத்தூர்–1.




[விலை 75 பை

# முன்னுரை

உலகின்கண் பழமையான நாகரிகங்களையுடைய நாடுகளில் கிரேக்க நாடும் ஒன்று. இதனை நம்முடைய நூல்கள் யவனநாடு என்று கூறும். நமது பழந்தமிழ் நாட்டினிற் போலவே யவன நாட்டிலும் மறமாண்பு இலக்கியங்களில் சிறப்பிடம் பெற்று விளங்கிற்று. அத்தகைய மறமாண்புடையவர்களிலே தீசியசும் ஒருவன். புலூட்டார்க்கு என்னும் வரலாற்றாசிரியன் தீசியசை உரோமுலசுடன் ஒப்பிடுகின்றான். உரோமுலசு உரோமாபுரியைத் தோற்றுவித்தான். தீசியசு அத்தீனிய நாட்டை மக்கள் வாழ்விற்குத் தக்கதாக ஆக்கினான். தீயவரை ஒறுத்து நல்லவரை வாழ்வித்தான்.

இன்னோரன்ன சிறப்புக்கள் வாய்ந்த தீசியசின் வரலாற்றை நம் தமிழ் மாணாக்கரும் அறிந்து இன்புறுதற் பொருட்டு இதனைத் தமிழில் ஆக்கித் தந்துள்ளேன்.

இது பிறநாட்டுப் பழங்கதையாயினும் இன்றியமையாத இடங்களிலன்றி, இதன்கண் தனித் தமிழ்ச் சொற்களும் தமிழ் மாணாக்கர்க்கு எளிதில் விளங்கும் கருத்துக்களுமே பயன்படுத்தப் பட்டுள்ளன.

இந்நூல் 1965ஆம் ஆண்டில் வெளிவந்துள்ள புதிய பாடத் திட்டப்படி வெளியிடப்பட்டுள்ளது. இந்நூலை மாணாக்கர்க்குப் பயிற்றுவிக்கும் ஆசிரியப் பெருமக்கட்கும், இந்நூலை நன்முறையில் வெளிவரச் செய்த வெளியீட்டகத்தார்க்கும் என் பணிவான நன்றியும் வணக்கமும் உரியவாகுக.

மதுரை,
1—11—65. } ஆசிரியன்

# பொருளடக்கம்

# நாட்டு வணக்கம்

ஜன கண மன அதிநாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா,
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா,
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா,
தவசுப நாமே ஜாஹே
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா,
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா,
ஜய ஹே ஜய ஹே ஜய ஹே
ஜய ஜய ஜய ஜயஹே!

– இரவீந்திரநாத தாகூர்

## பொருள்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லோருடைய மனத்திலும் ஆட்சி
செலுத்துகிறாய்.

நின் திரு நாமம், பஞ்சாப்பையும் சிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.

அது விந்திய, ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
யமுனை, கங்கை நதிகளின் இன்பநாதத்தில் கலக்கிறது;
இந்தியக்கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.

அவை நின் ஆசியை வேண்டுகின்றன;
நின்புகழைப் பாடுகின்றன.

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி, வெற்றி, வெற்றி.

# உறுதி மொழி

என்னுடைய தாய்நாடு இந்தியா; இந்தியர்கள் அனைவரும் என் உடன் பிறந்தவர்கள்.

என் தாய்த்திருநாட்டை நான் உளமார நேசிக்கின்றேன். வளமும், வேறுபாடும் நிறைந்த அதன் மரபினை எண்ணி இறும்பூதடைகின்றேன். அன்னதன் புகழுக் கேற்பத் தகுதியுடை நன்மகனாய் விளங்க நான் என்றும் முயல்வேன்.

அன்புடன் என்னை ஈன்ற அன்னை, ஆருயிர்த் தந்தை, ஆசிரியப் பெருந்தகை, ஆன்ற முதியோர் அனைவரையும் வணங்குவேன். மாண்புடை அன்னவர் அனைவரையும் நன்னயம் துலங்க நடத்துவேன்.

என் நாட்டிற்கும், என் மக்களுக்கும் என் வந்தனை என்றும் உரியது. என் நாட்டவர் வாழ்வின் நலமும் வளமுமே என் போற்றரும் இன்பம் என்று உளம் பூரிப்பேன்.

# 1. அன்னையின் ஆணை

முன்னொரு காலத்தில் திரோசீன் என்னும் நாட்டைப் பித்தியசு என்னும் மன்னன் ஆண்டு வந்தான். அவனுக்கு அழகிய மகள் ஒருத்தி இருந்தாள். அவளுடைய பெயர் ஐத்திரா. அவளிடத்தில் அழகு மிக்க மகன் ஒருவன் தோன்றினன். அவனுக்கு அவள் தீசியசு எனப் பெயரிட்டாள். அவன் தன்னை ஒப்பாரும் மிக்காரும் இல்லாத ஆண்மையும் புகழு முடையவனாக வளர்ந்தான். அத்துணைச் சிறப்பு மிக்க ஒருவனை மகனாகப் பெற்ற தாய் உண்மையிலேயே மிகவும் மகிழ்ச்சியுடையவளாக இருக்க வேண்டும். ஆயினும், அவள் தன் அரிய புதல்வனுடைய முகத்தைக் காணும் பொழுதுமட்டுமே புன்முறுவல் பூப்பாள். மற்ற வேளைகளில் துன்பமே உருக்கொண்டவளாகக் காணப்படுவாள். என்னெனில், அவளது கணவன் நெடுங்காலமாகவே அவளைப் பிரிந்து வேற்று நாடு சென்று விட்டான். ஆண்டுகள் பல கடந்தும் அவன் அவளுக்கு எத்தகைய செய்தியும் அனுப்பவில்லை. தன் மகனைப் பற்றியும் அவன் கவலை கொண்டதாகத் தெரியவில்லை. எனவே, அவன் தன் மனைவியை முற்றிலும் மறந்து விட்டான் என்றே அவள் எண்ணி வருந்தினள்.

திரோசீன் நகரத்தையடுத்து ஒரு மலை இருந்தது. அதன் முடியில் போசிடோன் என்னும்

தெய்வத்திற்கு ஓர் அழகிய கோவில் எழுப்பப்பட்டிருந்தது. ஐத்திரா நாள் தோறும் அம்மலையுச்சியின் மேல் ஏறி, அத் தெய்வத்தை வணங்குவாள். பகல் முழுவதும் அக் கோயிலில் அமர்ந்து எதிரில் பரந்து கிடந்த விரிகுடாவிற்கு அப்பால் காட்சியளிக்கும் கடற்கரையையும், அதனையடுத்து வானளாவி நின்ற சிகரங்களையும் பார்த்துக் கொண்டேயிருப்பாள். இவ்வாருக ஆண்டுகள் பல கழிந்தன.

தீசியசிற்கு ஆண்டு பதினைந்து முற்றுப்பெற்றது. அவன் துள்ளித்திரியும் இளங்காளை போல் காட்சியளித்தான். ஒரு நாள் ஐத்திரா தன் அருமருந்தன்ன புதல்வன் தீசியசை மலைச் சிகரத்தின் மேலிருந்த போசிடோன் கோட்டத்திற்கு அழைத்துச் சென்ருள். கோயிலை வலம் வந்து முறையே தெய்வத்தை வணங்கிய பின்னர், அவள் கோயிலுக்கருகேயுள்ள பூங்காவிற்குள் நுழைந்தாள். தீசியசும் தன் தாயுடன் சென்ருன். அங்கு ஓங்கி வளர்ந்த ஒரு முதுமரத்தைச் சூழ்ந்து, புல்லும் புதரும் மண்டிக் கிடந்தன. அங்கு வேறு யாரும் காணப்படவில்லை. ஞாயிற்றின் கதிர்களை உட்புகவிடாமல் மரங்கள் நெருங்கி அடர்ந்திருந்தன. பறவையினங்களின் பாடல்கள் தீசியசின் உள்ளத்தில் மகிழ்ச்சியைத் தோற்றுவித்தன. அந்த இனிய சுற்றுச் சார்பிலும் ஐத்திரா எதனையோ எண்ணிப் பெருமூச்செறிந்தாள். அவளுடைய செயல்கள் யாவும் தீசியசிற்குப் புதிராகவே இருந்தன.

ஐத்திரா தன் அன்பு மகனை அழைத்து, "கண்ணே! இதோ இப் புதருக்குள் நுழைந்து அம் முதிய மரத்தடிக்குச் செல். அங்கு ஒரு பெரிய கல் காணப்படும். அதனை உன் தோள் வலிமையால் புரட்டு. அதனடியில் புதைந்து கிடப்பவற்றை என்னிடம் கொண்டு வா," என ஆணையிட்டாள்.

தீசியசு அரிதில் முயன்று அப் புதருக்குள் நுழைந்தான். என்னெனில், பல்லாண்டுகளாக அதனுள் யாருமே நுழைந்ததாகக் காணப்பட வில்லை. அம்முதுமரத்தின் வேர்கள் மலைப் பாம்பு கள் போல் ஒன்ரேடொன்று பின்னிக்கிடந்தன. அவற்றின் மேல் பல வகையான முட்செடிகளும் கொடிகளும் மண்டிக் கிடந்தன. நெடுநேரம் தேடிய பின்னரே தீசியசால் தன் தாய் குறிப்பிட்ட கல்லைக் கண்டுபிடிக்க முடிந்தது. அது முற்றிலும் பாசி படர்ந்து பசுமையாகவே காணப்பட்டது. அது அவனுடைய தாய் குறிப்பிட்டவாறு ஒரு கல் அன்று; அது தனியொருவனல் புரட்ட முடியாத அளவுடைய பெரிய பாறை. எனினும் இளங் காளை யாகிய தீசியசு பாறையின் பெருமையை எண்ணித் தன் பெருமையைக் குறைத்துக் கொள்ளவில்லை. 'முயற்சி திருவினையாக்கும்' என்னும் உள்ள எழுச்சி யுடன் தன்னுடைய அன்னையின் ஆணையை நிறை வேற்ற முயன்றான். அவன் தன் வலிமை முழுவ தையும் பயன்படுத்தி அப்பாறையை அசைத்துப் பார்த்தான். உச்சி வேளையும் கடந்தது. ஞாயிற் றின் கதிர்கள் காவினுள் புகாவிடினும் அங்கு வெப்பம் மிகுதியாயிற்று. அவனுடைய நெற்றியி

னின்று வியர்வை ஆருகப் பெருகிப் புருவத்தின் வழியே ஒழுகி விழியை மறைத்தது. தீசியசு தன் ஆற்ருமையை எண்ணி வெட்கினுன். அவனே யறியாமலே அவனுடைய கண்களிலே நீர் மல் கிற்று. என் செய்வது? யாதும் பயனில்லே. அவன் வெறுங் கையோடு தன் தாயிடம் மீண்டான். "அம்மா! நான் எத்துணே முயன்றும் பயனில்லே. அதனே என்னுல் அசைக்கக்கூட முடியவில்லே; ஆயினும் ஒன்று கூற விரும்புகிறேன். என்னு லேயே அதனேப் புரட்ட முடியவில்லேயெனில் திரோசீன் நகரத்திலுள்ள யாரும் அதனே அசைக்க மாட்டார்," என்று தன் ஆற்ருமையைத் தெரிவிப்ப தோடு தன் தாய்க்கு ஆறுதலும் கூறினுன்.

ஐத்திரா ஒன்றும் கூருது பெருமூச்செறிந் தாள். பின்னர் ஒருவாறு தெளிந்து, "என் ஆருயிர்ச் செல்வா, நின் தோல்வியே வெற்றிக்கு முதற்படி; அயர்ச்சி கொள்ளாதே. கடவுளர் மக்களுடைய விருப்பத்தை உடனே நிறைவேற்றி விடுவதில்லே. எனினும், அவர்களிடம் நீதி உண்டு. இன்னும் ஓராண்டு பொறுத்திரு. திரோசீன் நகரின்கண் ணுள்ள யாவரினும் நீ வலியனுகி விடுவாய்," என்று ஐத்திரா தன் மகனே ஆற்றுவித்தாள். தானும் ஒருவாறு தன்னே ஆற்றிக் கொண்டாள்.

பின்னர், அவள் தன் மகனே அழைத்துக் கொண்டு மீண்டும் கோட்டத்திற்குள் சென்று தெய்வத்தை வணங்கி மாலேயில் தன் இல்லத்திற்கு மீண்டாள்.

ஓராண்டுக் காலம் உருண்டு ஓடிற்று. ஐத்திரா தன் மகனை அழைத்து மலையுச்சிக்குப் போய்த் தெய்வத்தை வணங்கி அக்கல்லினைப் புரட்டுமாறு மகனுக்கு ஆணையிட்டாள்; ஆயினும் பயனில்லை. தீசியசு தன் முயற்சியில் தோல்வியே கண்டான். முதல் ஆண்டிற் போலவே ஐத்திரா பெருமூச் செறிந்து, தன் மகனுக்கு ஆறுதல் கூறித் தெய் வத்தை வணங்கித் தன் மகனோடு வீடு திரும்பி னாள். மேலும் இரண்டு ஆண்டுகள் இவ்வாறே கழிந்தன. தீசியசு அக்கல்லின் சிறப்பியல்பைப் பற்றியும், அதனடியில் புதையுண்டு கிடக்கும் பொருள்களைப் பற்றியும், தன் தாயின் கட்டளை யின் நோக்கத்தைப் பற்றியும் தன் தாயிடம் வினவி அறிந்து கொள்ள விழைந்தான். அவன் அந் நினைவோடு அவளைக் கண்ட பொழுதெல்லாம் அவளது முகம் ஞாயிற்றின் ஒளி காணாத தாமரை போல் கூம்பியிருந்ததையே கண்டான். எனவே, தன் வினாவினால் மேலும் தன் தாயினது துன்பத்தை அவன் மிகுதிப் படுத்த விரும்பவில்லை. ஒரு நாள் ஒரு பொழுதாயினும் அக்கல்லைத் தான் புரட்டுவது உறுதி; மற்று, அந்நகரத்தில் உள்ள யாரும் அதனை அசைத்தலும் அரிது என அவன் துணிந்தான். மேலும் தன் ஆற்றலைப் பெருக்கிக்கொள்ளும் பொருட்டு ஆண்மை மிக்க தொழில்களிலேயே தன்னை ஈடுபடுத்தி வந்தான். மற்போரிலும் குத்துச் சண்டையிலும் தன்னை எதிர்த்தவர் யாவரையும் எளிதில் வென்றான். குதிரையேற்றமும், ஏறு தழுவு தலும் அவனது நடைமுறைப் பொழுதுபோக்காக

அமைந்தன. மலைகளிலும் காடுகளிலும் கரடி, மான், வரையாடு முதலியவற்றை வேட்டையாடி வந்தான். பாறைகளுக்கிடையே தாவி ஓடுவதில், வரையாடும் மரையினமும் அவனுக்குப் பின்னடைந்தன. வேட்டையாடுவதில் தீசியசை விஞ்சியவர்கள் அந்த நாட்டிலேயே இலராயினர். நிலபுலன்களைப்பாழாக்கி வந்த 'பாயியா' என்னும் காட்டுப் பன்றியை வெல்லுதல் யார்க்கும் அரிதாயிருந்தது. தீசியசு அதனை ஒரே அம்பில் கொன்று தீர்த்தான். மக்கள் யாவரும் தீசியசைப் போற்றிப் புகழ்ந்தனர். "கடவுளர் யாவரும் அவ்விளைஞன் பால் அருள் பூத்துள்ளனர்," என அவர்கள் தமக்குள் பேசிக் கொண்டனர்.

தீசியசிற்கு யாண்டு பதினெட்டு நிறைவுற்றது. ஐத்திரா வழக்கம்போல் தன் மகனை மலைக் கோயிலுக்கு அழைத்துச் சென்றாள். திருமதில் வலம் வந்து தெய்வத்தை வணங்கி, "அன்பு மகனே, கடவுளர் யாவரும் உன்பால் தம் கடைக்கண் பார்வையைச் செலுத்துவர்; அவர் தம் இன்னருளால் இன்று நீ அக் கல்லைப் புரட்டுக. உன் முயற்சி இன்றும் கைகூடவில்லையெனின் நீ என்றும் உன்னை யாவனென்று அறிந்துகொள்ள முடியாது," என உணர்ச்சி ததும்பக் கூறினாள். அன்னையின் ஆணையைச் சிரமேல் ஏற்ற தனையன் புதருக்குள் நுழைந்து கல்லை அசைத்தான். அது மெல்லென அசைந்தது. இளைஞன் புத்துணர்ச்சி பெற்றான். "என் இதயமே வெடித்தாலும் வெடிக்கட்டும்," என்று தன் வலிமை முழுவதையும் ஒருங்கு கூட்டி

வீர முழக்கமிட்டுக் கொண்டு, அதனை அசைத்துப் புரட்டினன். அது மேலெழுந்து புரண்டு வீழ்ந்தது.

அதனடியில் அவன் உற்றுக் கவனித்தபொழுது ஆங்கு ஒரு வெண்கல வாள் தென்பட்டது. அதன் பிடி செம்பொன்னல் அழகுமிளிரச் செய்யப்பட்டிருந்தது. அதனருகில் பொன்னலாகிய அடிபுதை அரணங்கள் இரட்டையாகக் காணப்பட்டன. அவன் அப்புதை பொருள்களைக் கைகளில் ஏந்திக்கொண்டு, புதர்களின் ஊடே புலிக்குட்டிபோல் பாய்ந்து புறம் போந்தான். அவற்றைத் தன் தாயின் திருவடிகளிலே படைத்தான். ஐத்திரா உடனே தன் முன்தானையால் தன் முகத்தை மூடிக்கொண்டு நெடுநேரம் தேம்பித்தேம்பி அழுதாள். தீசியசு செய்வதறியாது தன் தாயருகே மருண்டு நின்றான். தன் தாய் தேம்புவதைக் கண்ட தனயன் காரணம் தெரியாமலே தானும் அழுதான். தன் வலிமையுள்ள அளவும் அழுதுதீர்த்த ஐத்திரா தன் கண்களைத் துடைத்துக்கொண்டே, “ஆற்றல்மிக்க மகனே, நீ இவற்றை எடுத்து உன் இதயத்தோடு மறைத்துக் கொள்,” என்று அழைத்துக்கொண்டு கோவிலின் மதிற்புறத்தே சென்று ஆங்கு எதிர்ப்புறம் கடலோரமாகக் காணப்பட்ட நிலப்பரப்பைக் காட்டி, “நம் காலடியில் தென்படும் இந்நாட்டினைக் காண்கின்ருயா?” என வினவினள். “ஆம் தாயே. இது தானே நான் பிறந்து வளர்ந்த திரோசீன். இதனை நான் அறியமாட்டேனு?” என்ருன். “ஆம் அறிவாய், இது பரப்பிலே மிகச் சிறியது; மழை வளங் கரந்து பாலையாகிய காடும் மலையும் மிக்கது;



'அது மேலெழுந்து புரண்டு வீழ்ந்தது.'

இதற்கு வடமேற்காகப் பார். கடலுக்கப்பால் காணப்படுகிறதே அந்நாடு யாது?'' என்று வினவினுள்.

''ஆம் தாயே. அது ஆத்திக்கா என்னும் நாடு. அதன் தலைநகரமே கற்ருேர் பலர் வாழும் அத்தீனியப் பெருநகரம்,'' என்று தீசியசு விடை பகர்ந்தான்.

''மாற்ருரும் மதித்தற்குரிய மாண்புமிக்க மகனே, அந்நாடு வனப்பும் வளமுமுடையது; பரப்பிலும் பெரிது. அங்கு ஆலிவ் நெய்யும் தேனும் மக்களையும் கடவுளரையும் அகமகிழச் செய்யும். அந்நாட்டினை நெடிய மலைத்தொடர்கள் அணிசெய் கின்றன; அத்தொடர்களின் நரம்புகளன்ன வெள்ளியும் எலும்புகளைப் போல் பளிங்குக்கற்களும் அந்நாட்டின் செல்வத்தைப் பெருக்குகின்றன. மணமிக்க பூங்கொத்துக்களையும் சுவைமிக்க கனி களையுமுடைய பல்வகை மரங்களும் குன்றுகளைப் பொலிவுறச் செய்கின்றன. புல்வெளிகளிலே நீலமும் அந்திவண்ணமும் அணிஅணியாகப் பூத்துக்கிடக் கின்றன. பாறைகளின் இடுக்குகளினின்றும் தெளிந்த நீரோடைகள் சலசலவென்னும் ஒலியோடு கூழாங்கற்களை உருட்டிக்கொண்டு ஓடுகின்றன. அவற்றின் அருகே புள்ளினங்கள் பல தம் இனிய குரலில் இசைபாடி மகிழ்விக்கின்றன.

'' அவ்வணிமிகு நாட்டின்கண் குடிகள் செழித் தோங்கிய பன்னிரு நகரங்கள் உள்ளன. அங்கு வாழுநர் யாவரும் பழம்புகழ் படைத்த பெருங்குடி யினராவர். இன்னேரன்ன சிறப்புமிக்க நாட்டிற்கு நீ வேந்தனுயின், அதனை எத்துணை மகிழ்ச்சி

யோடும் திறமையோடும் ஆட்சி புரிவாய்?'' என ஐத்திரா தன் உள்ளக் கிடக்கையை ஒருவாறு தெரிவித்தாள்.

தீசியசு தன் தாயின் சொற்களைக் கேட்டு வியப்புக் கடலில் மூழ்கினன். பின்னர் ஒருவாறு தெளிந்து தனக்கு எதிரே நீண்டு கிடக்கும் நீலக் கடல் வழியே பார்த்தான். ஆத்திக்காவின் நெடிய மலைத்தொடர்கள் வான வெளிக்கும் கடற் பரப்பிற்கும் இடையே எழுப்பப்பட்ட கோட்டைச் சுவர்கள்போல் காணப்பட்டன. அத் தொடர்களுக்கு இடையே எழுப்பப்பட்டிருந்த அத்தீனியப் பெரு நகரம் அவன் கண்ணுக்குப் புலப்படவில்லை.

தீசியசின் மார்பு பெருமிதத்தால் விம்மிற்று. அவன் தாயை நோக்கி, ''நான் தங்களுடைய இன்னருளால் இவ்வணிமிகு நாட்டிற்கு அரசனுவேனுயின் அதனை அறிவும் வலிமையும் ஒருங்கு அமைய ஆட்சி புரிவேன். இறைவனின் விருப்பத்திற்கிணங்க நான் இம்மை வாழ்வை நீத்து வானுலகு செல்லுங்கால் எம்குடிகள் யாவரும் 'யாம் எம் நல்ல மேய்ப்பானை இழந்த ஆநிரை போல் ஆயினம், ஐயகோ! என் செய்வோம்?' என வருந்துவர்,'' என்ருன்.

ஐத்திராவின் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது. ''மகனே, அவ்வாருயின் புதையுண்டு கிடந்த வெண்கல வாளையும் பொற் பாதுகைகளையும் எடுத்துக்கொண்டு பள்ளாசுச் சிகரத்திற்குச் செல். அங்குத்தான் அத்தீனிய நகரவேந்தன் ஈதியசு சிறப்புடன் ஆட்சி புரிகின்ருன். நீ அவனைக்கண்டு

புதைபொருள்களைக் காட்டி அவற்றின் உட் பொருளை வினவு; ஆண்டவன் தன் பேரருளால் எதனை உனக்கு அருளுகின்றானோ அதனை நீ அடைந்து கொள்,'' என ஆசிகூறி அனுப்பினாள் ஐத்திரா.

தீசியசு தன் தாயைப் பிரிந்துசெல்ல ஆற்றாமல் அழுதான்.

அப்பொழுது அவ்வீரத்தாய், ''அய்யனே! நீ என் பொருட்டு வருந்தாதே. அவரவர் ஊழ் அவர வரை நிழல் போல் தொடரும். துன்பம் ஒன்றையே துய்த்தவருக்கு அதனைத் துய்ப்பது எளிது. என் குழவிப் பருவமும், இளமைப் பருவமும் துன்பத் திலேயே கழிந்தன. நின் தந்தையின் பிரிவாற் றாமை என்னை இந்நாள் வரை துயரக் கடலில் ஆழ்த்தியது. என் எதிர்கால வாழ்வும் இடுக்கண் மிக்கதாகவே இருக்கும். எதிரிகள் என்னைத் தளை யிட்டு அடிமையாக்குவர். ஆயினும், என் துயர மனைத்தும் வீண்போகாது. பகைவர் பழி வாங் கப்படுவர். அன்று திராய் நகரமும் இல்லிய அரண் மனையும் அடியோடு அழிக்கப்படும். அப்பொழுது உன் மகனே என்னை அடிமைத் தளையினின்றும் விடுவிப்பான். அப்பொழுது உன்புகழ் உலகெலாம் பரவக் கேட்பேன். எனக்குறும் இடுக்கண்களை நானே ஏற்றுக்கொள்வேன். நீ வருந்தற்க,'' என்று ஆறுதல் கூறி மகனை உச்சி மோந்து வழி யனுப்பி, வழக்கம்போல் கோயிலினுட் புகுந்தாள். அதன் பின்னர்த் தீசியசு தன் அருமைத் தாயைக் காணவில்லை.

### கட்டுரைக் குறிப்பு

I தீசியசு தன் தந்தையின் பரிசுப் பொருள்களை அடைதல்.

1. முன்னுரை 2 தீசியசின் பிறப்பும், தாயின் துன்பமும். 3. தாயின் கட்டளை. 4 தனையனின் ஆற்றுமை. 5. முயற்சி திருவினையாக்கும். 6. தாயின் உரை. 7. அன்னையின் வாழ்த்து. 8. முடிவுரை.

---

## 2. சிலந்திச் சிலம்பு

தாயைப் பிரிந்த தனையன் தந்தையைக் காண விழைந்தான். திரோசீனிலிருந்து ஏதென்சு நகரத்திற்குக் கடல் வழியாகவும் செல்லலாம்; நில வழியாகவும் செல்லலாம். தீசியசின் தாயும், பாட்டனாகிய பித்தியசும் கடல் வழியாகச் செல்லுமாறு அவனிடம் கூறியிருந்தனர். ஏனெனில், கடல் வழியாகச் செல்வதால் இடையூறு ஒன்றும் நிகழாது. நிலத்தின் வழியாகச் செல்வானாயின் அவன் பல இன்னல்களுக்கு ஆளாக வேண்டும். காடும் மலையும் அடர்ந்த வழிகளிலே கொடிய விலங்குகளால் அவனுக்குத் துன்பம் நேரக்கூடும் அவைகளையேனும் அவன் எளிதில் வென்று விடுவான். அவற்றினும் கொடிய கள்வர் அவனை மறைந்திருந்து தாக்குவர்.

மூத்தோர் சொல் அமிழ்தெனக் கருதினன் தீசியசு. ஆகலின், கடல் வழியாகச் செல்லவேண்டுமென்றே அவன் முதலில் எண்ணினன். அதற்கும் நாட்கள் பல ஆகுமே என அவன் மயங்கினன். விரைந்து பறந்து சென்று தன் தந்தையைக் காண்

பதற்கு இறைவன் தனக்குச் சிறகுகளைப் படைக்க வில்லையே என ஏங்கினன்.

இதற்கிடையில் அவனுடைய எண்ண அலைகள் ஏதென்சு நகரத்திலிருந்த அவனது தந்தையினிடத்திற்குச் சென்றன.

"என்னையன்றி என் தந்தைக்கு விருப்பமான வேறு சில மக்களும் இருப்பார்களெனின் என் செய்வது? அவ்வாருயின், என்னை அவர் அன்புடன் வரவேற்பாரா? அவர் என்னை வரவேற்கு மாறு யான் செயற்கரிய செய்து விட்டேனு? நான் பிறந்ததிலிருந்தே அவர் என்னை மறந்து விட்டார். அவ்வாறிருக்க அவர் என்னை ஏன் வரவேற்க வேண்டும்?'' என்று தீசியசு பலவாருக எண்ணி நெடுநேரம் வருந்தினன். பின்னர் ஒருவாறு தெளிந்து, "யானையானது அம்பு பாய்ந்து புண் பட்ட விடத்தும் தளராமல் தன் பெருமையை நிலைநிறுத்தும்; அதுபோல ஊக்கமுடையவர் தாம் கருதிய உயர்ச்சிக்குச் சிதைவு வந்தபொழுதும் தளராமல் தம் பெருமையை நிலைநிறுத்துவர். எனவே, செயற்கரிய செய்தேனும் என் தந்தை என்னை விரும்புமாறு செய்வேன். அவருக்கு ஐம்பது மக்களிருப்பினும், 'அவர்கள் யாவரினும் சிறப்புடையவன் தீசியசு' என்று என் தந்தை புகழு மாறு நான் விளங்குவேன். 'யூரிஸ் தீயசுக்கு' அடிமைப் பட்டுக்கிடந்த "ஹெராக்ளிசு' தன் அடிமைத்தளையை முறித்தெறிந்து ஆண்மை மிக்க செயல்களாற்றினன். அதனல், அகிலமெல்லாம் அவனைப் புகழ்ந்தது. கள்வரையும், கயவரையும்,

தீய விலங்குகளையும் அவன் கொன்று தனக்குப் புகழ் தேடிக்கொண்டான். அவன் தன் பருந்தடி யால் குன்றுகளை நொறுக்கினான். பெரிய நீர்நிலை களை வற்றச் செய்தான்.

"அவன் அரிய பல செயல்களைச் செய்ததால், அவனை மக்களனைவரும் மதித்துப் போற்றினர். என்னெனில், அவன் அவர்களது துன்பத்தைத் துடைக்க ஆவன செய்தான்; அவர்களும் அவர் களது மக்களும் நல்வாழ்வு வாழ அவன் வழி வகுத்துக் கொடுத்தான். தனக்கு இணையில்லாத புகழ் ஒன்றே உலகத்தில் இறவாது நிற்பது என அவன் அறிந்திருந்தான்.

"அத்தகைய உயர்ந்த புகழை யான் அடைவது யாங்ஙனம்? நன்மக்களுக்குக் கேடுவிளைக்கும் தீய வர்களையும் விலங்குகளையும் ஒறுக்கவேண்டும். அதுவே புகழ்பெறுவதற்குத் தக்க வழி. அத்தகைய அரிய செயல்களை ஆற்றுவதற்குரிய வாய்ப்புக்கள் நிலத்தின் வழியாகச் சென்றால்தான் எதிர்ப்படும். எனவே, நான் காடும் மலையும் அடர்ந்த நில இணைப்பின் வழியே செல்வேன். அருஞ்செயல் ஆற்றுவேன்; அன்னையின் ஆணையை நிறைவேற்று வேன்; தந்தையின் அன்பிற்குத் தகுதி பெறு வேன்," என்று சூளுரை செய்துகொண்டு தீசியசு தன் செலவினைத் தொடங்கினான்.

அவன் புல்லும் புதரும் முள்ளும் பிறவும் மண்டிக் கிடந்த காடுகளைக் கடந்து மலைகளுக் கிடையே சென்றான். அவனுடைய தந்தையின் நெடிய வாள் அவனது இடையிலே அழகுடன்

மிளிர்ந்தது. இறுதியாக அவன் சிலந்தி மலைகளைச் சென்றடைந்தான். அம்மலைத் தொடர்கள் சிலந்திக் கூடு போல் வளைந்து வளைந்து செல்லும். அத் தொடர்களுக்கு இடையே ஞாயிற்றின் கதிர்களும் உட்புகாத காடுகள் நிறைந்திருக்கும். அவற் றிடையே ஒழுகிக் கொண்டிருக்கும் ஓடைகளின் வழியாகச் சென்றவர் மலைத் தொடர் பலவற்றைக் கடந்து மேலே சென்று கொண்டே இருப்பர். அவர்கள் மீண்டும் மருதநிலத்தைக் காண்பது அரிது. தீசியசு பல மலைத்தொடர்களைக் கடந்து மேலே சென்றான். அங்கிருந்து அவன் தாழ் நிலத்தை நோக்கினான். அது வானத்தைப் போல நீலப் பரப்பாகத் தோன்றிற்று. அவன் தன் தலையை நிமிர்த்தி மேலே பார்த்தான். மலை முகடுகளை மஞ்சு படர்ந்து மறைத்துக்கொண்டது. முகிற் கூட்டத்திற்கிடையே அவன் நடந்துகொண்டிருந் தான். நாற்புறமும் மதிற்சுவர்கள் போல கரிய மலைத் தொடர்களே காணப்பட்டன. புகைப் படலங்கள் அவன் கண்ணையும் விண்ணையும் மறைத்தன. எவ்வாறாயினும் அவன் அம்மலை முகட்டில் ஏறி மறுபுறம் இறங்கினால்தான், அவன் தான் எண்ணிய தேயத்திற்குச் செல்லுதல் கூடும். எனவே, தீசியசு அசையாத ஊக்கத்துடன் முன் னேறினான். ஆங்கு ஒரு கற்குவியல் தென்பட்டது.

அக் கற்குவியலின்மேல் கரடித்தோல் போர்த் திய ஒருவன் அமர்ந்திருந்தான். அக்கரடியின் தலை அவனுடைய முடியாக விளங்கிற்று. அவனுடைய புருவங்களுக்குமேல் அக்கரடியின் வெள்ளிய பற்கள்

அச்சந்தோன்ற இளித்துக்கொண்டிருந்தன. அவ் விலங்கின் முன்கால்கள் அவன் கழுத்தைச் சுற்றிக் கட்டப்பட்டிருந்தன. அக்கரடிக் கால்களின் நகங் கள் அவன் மார்பிலே வெண்மையாக ஒளிர்ந்தன. அக்கொடியோன் தீசியசைக் கண்டவுடன் எழுந்து நின்று அவனைச் சூழ்ந்திருந்த குன்றுகள் யாவும் அதிரும்படி சிரித்தான்.

''இச்சிலந்திக் கூட்டிற்குள் பறந்துவந்த அழகிய ஈயே! நீ யார்?'' என்று அக்கரடித் தோலான் தீசியசை நோக்கி வினவினன். அவனைப் பொருட்படுத்தாமல் தீசியசு நிமிர்ந்து நடந்தான். ''இவன் ஒரு கள்வனுக இருக்கக்கூடும். சரி, அதற்குள்ளாகவே எனக்குப் போர் கிட்டியது,'' என்று தீசியசு மகிழ்ந்தான். அவனுடைய தோள் கள் விம்மின.

தீசியசின் ஏறுபோல் பீடு நடையைக் கண்ட அவ்விலங்குமகன் பற்களை 'நறநற'வெனக் கடித்து வெடிபடச் சிரித்தான். ''அடே அஞ்சாத ஈயே! இந்தச் சிலந்திக் கூட்டுக்குள் வழி தவறி நுழைந்த எந்த ஈயும் உயிருடன் மீள முடியாது என்பதை நீ அறிய மாட்டாய் போலும். இப்பொழுதாவது அறிந்துகொள். இதுதான் அச்சிலந்தியின் இருப் பிடம். நான்தான் இங்கு வரும் ஈக்களைப் பிடித்துத் தின்னும் சிலந்தி. என் அருகில் வா. எனக்கு இன்று நல்ல விருந்துதான். ஓட முயலாதே; அதனல் பயனில்லை. என் தந்தை ஹெபாய்ஸ்டஸ் இச் சிலந்திக் கூட்டினை அவ்வளவு சிறப்பாக

அமைத்திருக்கிருன். யாரும் இதனின்று பிழைக்க முடியாது,'' என்று அச்சிலந்தி மகன் சீறினன்.

கூற்றுவன் தானே வெகுண்டு மேல் வந்தாலும், அஞ்சாது எதிர்நிற்கும் ஆற்றலுடையவனே மற மாண்புடையவன் ஆவன். அத்தகைய மறமாண்பில் ஒரு சிறிதும் குறையாத தீசியசு சிலந்தி மகனின் சீற்றம் கண்டு அஞ்சினன் அல்லன். அவனை ஓர் எளிய விலங்காக மதித்து அவனை நோக்கிப் பெரு மிதத்தோடு முன்னேறினன். "அடே அஞ்ச வேண்டுவதற்கும் அஞ்சாத பேதைச் சிலந்தியே! உன் பெயர் யாது? உன்னுடைய நச்சுப் பல் யாண்டு உள்ளது?'' என்று அக்கொடியவனை நோக்கி, சிங்கக்குட்டியை ஒத்தவனாகிய தீசியசு வினவினன்.

அச்சிலந்தி மகன் தன் இரண்டு கைகளையும் ஒன்ருேடொன்று புடைத்துக் கலகல வென்று நகைத்தான். "அடே பொடியா! என் பெயரையா வினவுகிருய்? பெரீபீட்டெஸ் என்பதே என் பெயர். நான் ஹெபாய்ஸ்டசிற்கு ஆந்திக்கிளீயா என்னும் சூரர மகளிடத்தில் தோன்றியவன். ஆனல் உலகத்தவர் என்னைக் 'குண்டாந்தடியன் கொரி நீட்டசு' என்று அழைப்பர். இதோ இச்சிலந்தியின் நச்சுப்பல்!'' என்று தன் அருகில் இருந்த வலிய பெரிய வெண்கலக் குண்டாந்தடியைத் தூக்கினன்.

"இது எனக்கு என் தந்தையால் கொடுக்கப் பட்டது. இச்சிலந்திக் கூட்டிற்குள் வழி தப்பி வரு கின்ற ஈக்களை நான் இக்குண்டாந்தடியால்தான் பொடித்துத் தின்பேன். அதற்கு முன் நீ உன்



"......என்னைக் 'குண்டாந்தடியன் கொரிநீட்டசு' என்று அழைப்பர்."

இடையில் கட்டியுள்ள அழகிய வாளையும், உன்னுடைய மேலாடையையும், பொற்பாதுகைகளையும் எனக்குக் கையுறையாகக் கொடுத்துவிட்டு ஓடிப்போ. இல்லாவிட்டால் நான் உன்னை இக் குண்டாந்தடியால் நொறுக்கிவிடுவேன்,'' என்று கொரிநீட்டசு தீசியசை நோக்கி எச்சரித்தான்.

சிறு நரியின் ஊளையைக் கேட்டுச் சிறுத்தை அஞ்சுமா? அடுத்த நொடியில் தீசியசு தன் மேலாடையைத் தன் இடக்கையில் தோள்பட்டையிலிருந்து மணிக்கட்டு வரை இறுகச் சுற்றினன். பின்னர், வானத்தில் மின் வெட்டுவது போல் தன் வாளை உருவிக்கொண்டு குண்டாந்தடியன் கொரிநீட்டசு மேல் பாய்ந்தான். கொரிநீட்டசு தன் குண்டாந்தடியை உயர்த்திக்கொண்டு தீசியசை நோக்கி ஓடி வந்து போர் முழக்கம் செய்து அவனை மும்முறை தாக்கினன். தீசியசு தன் இடக்கையால் அத்தாக்குதல்களைத் தாங்கினன். கையில் துணி சுற்றப்பட்டிருந்ததால் தீசியசின் கை பாதுகாக்கப்பட்டது. எனினும், ஒவ்வோர் அடி விழும்போதும் அவன் இளமரம் போல் வளைந்து வளைந்து பின் நிமிர்ந்தான். பின்னர், அவன் தன் வாளைச் சுழற்றிச் சிலந்தி மகனின் மார்பில் தாக்கினன். ஆனல், அவன் போர்த்திருந்த கரடித் தோலின் வழவழப்பினல் வாள் ஊடுருவிச் செல்லாமல் வழுவிக் கொண்டே போய்விட்டது.

தன் வாள் தப்பியதைக் கண்ட தீசியசு வெறி பிடித்தவன் போல் கொரிநீட்டசின் மேல் பாய்ந்து மற்போர் புரியத் தொடங்கினன். அவன் தன் வலிய

கைகளால் கொரிநீட்டசின் கழுத்தைக் கட்டிப் பிடித்துக் குரல்வளையை நெரித்தான். கொரிநீட்டசு காட்டுப் பன்றி போல் கத்திக்கொண்டு தீசியசை ஓர் உலுப்பு உலுப்பித் திமிறினன். இருவரும் கீழே விழுந்து மண்ணில் புரண்டனர். தீசியசு கொரி நீட்டசை உதறித் தள்ளிவிட்டு எழுந்து நின்ற பொழுதும், அக்குண்டாந்தடியன் தீசியசின் காலடி யிலேயே அசைவற்றுக் கிடந்தான். பிறகு தீசியசு கொரிநீட்டசின் குண்டாந்தடியையும் கரடித் தோலையும் தன் வெற்றிக்கு அடையாளங்களாக எடுத்துக்கொண்டான். தீசியசின் கன்னிப்போரைக் காணவந்த கழுகுகளும் காக்கைகளும் வானத்தில் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. தீசியசு அத் தீயோனின் கொழுத்த உடலை அவற்றுக்கு விருந் தாக அளித்துவிட்டு அவ்விடத்தினின்றும் நீங் கினன்.

அன்று முதல் சிலந்தி மலைக்குச் செல்பவர்கள் அச்சமில்லாது சென்றனர். தேனெடுக்கும் குறவர் களும், ஆடு மாடு மேய்க்கும் இடையர்களும் இன்னல் நீங்கிச் சிலந்திச் சிலம்பில் சிறப்புற வாழ்ந்தனர்.

### கட்டுரைக் குறிப்பு

I தீசியசு ஏதென்சிற்குப் புறப்படுதல்.

**1.** முன்னுரை. **2.** கடல் வழியாகச் செல்ல நினைத் தல். **3.** தீசியசின் வருத்தம். **4.** நிலவழியாகச் செல்ல உறுதி கொள்ளுதல். **5.** முடிவுரை.

II சிலந்தியுடன் முதற்போர்.

1. முன்னுரை. 2. சிலந்தி மலைகளைச் சென்றடைதல். 3. மலையின் அமைப்பு. 4. கரடித்தோலனின் தோற்றம். 5. சிலந்தியின் சீற்றம். 6. குண்டாந்தடியின் வரலாறு. 7. தீசியசின் முதற்போர். 8. முடிவுரை.

---

## 3. வியத்தகு விருந்து

தீசியசு தன் செலவினை மீண்டும் தொடர்ந்தான். சிலந்திச் சிலம்பின் முகட்டில் ஏறி அவன் மறுபுறமுள்ள பள்ளத்தாக்குகளின் வழியாக இறங்கத் தொடங்கினான். அங்கு ஒரு பரந்த பசிய புல்வெளி காணப்பட்டது. அதனைச் சூழவும் வளர்ந்திருந்த மரங்களுக்கிடையே தண்ணிழல் பரவி இருந்தது. புல்லை நிறையத் தின்று பசியாறிய ஆடுகள் நிழலில் ஆங்காங்கே படுத்துக் கிடந்தன. இடையர்களும் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தனர்.

தீசியசு புல்வெளியைக் கடந்து மரங்களுக்கிடையே நுழைந்தான். அம்மரங்களை அடுத்துக் கோட்டை மதில் போல் பாறைகள் அமைந்திருந்தன. பாறைகளுக்கிடையே ஊற்றுநீர் சலசலவென வீழ்ந்து கொண்டிருந்தது. அச்சிற்றருவிகள் யாவும் ஓரிடத்தில் கூடி ஓர் அழகிய நீர் நிலையாக அமைந்திருந்தது. அங்கு ஆம்பலும், குவளையும் பிறவகை நீர்ப் பூக்களும் பரந்து கிடந்தன. அக் காட்சி நீர் நிலையாகிய மங்கை பன்னிற வண்ணப் பட்டாடை புனைந்திருந்தது போல் தோன்றிற்று.

அந்நீர்நிலையின் அருகே நீரர மகளிரும் இடையரும் கைகோத்து ஆடிக் கொண்டிருந்தனர். ஆயினும், அவ்வாடலுக்கேற்ப அவர்கள் குழல் ஊதவில்லை.

தீசியசைக் கண்டதும் அவ்வாடல் மகளிர் வியப்பும் அச்சமும் விரவ ஒலித்தனர். இடையர்கள் அங்கிருந்து ஓடித் தம் ஆடுகளைத் திரட்டினர். அந் நீரர மகளிர் சுனையினுள் வீழ்ந்து மறைந்தனர்.

தீசியசு அவர்களைப் பற்றி ஆராய்வதை விடுத்து அந்தக் குளத்தின் தெளிந்த நீரை அள்ளிப் பருகினான். பின்னர் அதனுள் நீந்திக் குளித்தான். ஒருவாறு அவன் தெளிவு பெற்றான். எனினும், பசியும் அயர்ச்சியும் மிக்கிருந்தன; ஆகலின், அக்குளக்கரையிலேயே மர நிழலில் படுத்துத் தூங்கிவிட்டான்.

தீசியசு கண் விழித்த பொழுது, நீர் நிலைக் கப்பால் பாறைகளுக்கிடையே அமைந்த குகையின் புறவாயிலில் அமர்ந்துகொண்டு நீரர மகளிர் பலர் அவனை எட்டிப்பார்ப்பதும் தலையை உள்ளே இழுப்பதுமாக இருந்ததைக் கண்டான். அவர்களுள் ஒருத்தி, "உறுதியாக அவன் கொரிநீட்டசாக இருக்கமுடியாது," என்றாள். "அவனைக் கண்டால் கொள்ளையடிப்பவனாகத் தோன்றவில்லை. அவன் அழகும் பெருமிதமும் ஒருங்கு அமையப் பெற்ற இளைஞனாக இருக்கின்றான்," என்றாள் மற்றொருத்தி.

அவர்களது உரையாடலைச் செவிமடுத்த தீசியசு புன்முறுவல் பூத்தவண்ணமாக அவர்களைத்

தன்னிடம் அச்சமின்றி வருமாறு அழைத்தான். "அழகுமிக்க அணங்குகளே, அஞ்சற்க. நான் கொரிநீட்டகசு அல்லன். அவன் காக்கைகளுக்கும் கழுகுகளுக்கு மிடையே நெடிது உறங்குகின்றான். நான் அவனை வென்று, அவனுடைய கரடித் தோலையும் குண்டாந் தடியையும், அவ்வெற்றிக்கு அறிகுறியாகக் கொண்டுவந்துள்ளேன்," என்றான் தீசியசு.

அதனைக்கேட்டு மகிழ்ச்சியுற்ற அவ்வழகிய நங்கையர் சுனையில் தாவி நீந்திக்கொண்டே அவனருகில் வந்தனர். அஞ்சி ஓடிய இடையர் களையும் அவர்கள் அங்கு அழைத்தனர். தீசியசு தான் குண்டாந் தடியனைக் கொன்ற வரலாற்றை அவர்களிடம் கூறினான். அவ்வாட்டிடையர் தீசிய சின் திருவடியில் தம் சென்னியுற வணங்கிப் போற் றினர். அவனது வென்றிச் சிறப்பைப் புகழ்ந்து, கோதையரும் கோவலரும்,

"ஆடிடுவோம் புகழ் பாடிடுவோம்—இனி
ஆறலைக்கும் கள்வர் யாருமிலை
கூடிடுவோம் குழல் ஊதிடுவோம்—இனிக்
கூத்து மகிழ்ந்திடும் நேரமெலாம்
கேடினிச் செய்திட யாருமில்லை—கொரி
நீட்டகசு மாய்ந்தனன் கொடுவினையால்
தேடிடுவோம் செல்வம் பேணிடுவோம்—என்றும்
தீசியசின் வென்றி சாற்றிடுவோம்,"

என்று பாடிமகிழ்ந்தனர்.

பின்னர் அவ்வாட்டிடையர் அவனுக்கு ஆட்டுப் புலாலும் முந்திரிகைப் பிழிவும் கொடுத்து அவனது பசியைப் போக்கினர். நீரர மகளிர் அவனுக்கு

இனிய தேறலை வழங்கிப் பருகச் செய்தனர். தாம் விரும்பி உண்ணும் பொருள் சாவினை நீக்கும் அமிழ்தமே எனினும், தன்னை நோக்கிவந்த விருந்தினருக்கு அதனை அளித்தல் வேண்டும். அவ்வாறு அளிக்காமல் அதனைத்தாமே உண்ணுதல் விரும்பத்தக்கதன்று. இப்பொருளுரையை அக்காட்டிடை வாழ்ந்த கல்லாதவரும் அறிந்திருந்தனர் போலும்.

தீசியசு தன் பசிதீர உண்டான். அவர்கள் தீசியசைத் தம்மிடமே தங்கியிருக்குமாறு வேண்டினர். ஆயினும் அவன், "நான் நிறைவேற்ற வேண்டிய அரியகடமை ஒன்றுள்ளது. எனவே, நான் நில இணைப்பின் வழியாக ஏதென்சு மாநகரத்திற்குச் செல்லுதல் வேண்டும்," என்றான். அதனைக் கேட்ட ஆட்டிடையர், "ஐயகோ! இது என்ன கொடுமை? ஏதென்சு நகரத்தை நோக்கி நீ தனியே செல்கிறாயா? போர்ப்படைஞரின் துணையின்றி யாரும் அவ்வழியே செல்லத் துணியமாட்டார்," என்றனர்.

"நண்பர்களே, நீங்கள் என்னிடம் காட்டும் பரிவினை நான் பாராட்டுகிறேன். படைகளைப் பற்றியவரை என்னிடமுள்ள வாளும் தண்டமுமே சாலும். மற்றும், நேரிய உள்ளமுடையவன் தானே தனக்குத் துணையாவான். அவனுக்குப் படைஞரின் துணை வேண்டுவதில்லை," என்று தீசியசு விடை பகர்ந்தான்.

"எனினும், நீ நில இணைப்பைக் கடக்கும் பொழுது சினிசு என்னும் கொடிய கள்வனின் கண்களில் படுதல் கூடும். வழிப்போக்கரை அவன்

பைன்மரத்தால் பிணித்துப் பின்னர் அவர்களது உடம்பை இருகூருகப் பிளந்து விடுவான். அவனை யும் கடந்து செல்வாயாயின் சுகிரோன் என்னும் கொடியோனைக் காண்பாய். அவன் வழிப்போக் கரை மலைமுகட்டிலிருந்து தள்ளி, பாதாளத்தி லுள்ள ஆமைக்கு அவர்களை இரையாக்குவான். எல்யூசிஸ் என்னும் நகரத்தின் தலைவன் கற்குவான் விருந்தினர்களை மற்போர் செய்து கொன்றுவிடு வான். இன்னும் இதுபோல் பற்பல இடுக்கண்கள் எதிர்ப்படலாம்,'' என்று அவர்கள் அவனை எச்சரித் தார்கள்.

"இது மிகவும் தீயவர்கள் வாழும்நாடு. மன் னன் எவ்வழி மக்களும் அவ்வழி. அவன் தன் கடமையினின்றும் தவறியிருக்கிருன். அதனுல்தான் ஆறலைகள்வரால் இந்நாடு துன்புறுகிறது. நான் அவர்களை ஒறுத்து இந்நாட்டிற்கு நல்வாழ்வு தரு வேன்,'' என்று தீசியசு சூளுரை செய்தான். பின்னர், தன் வெண்கலத் தண்டினை எடுத்துக் கொண்டு புறப்பட்டான். நீரர மகளிரும் கோவல ரும் அவனது பிரிவை எண்ணி மிகவும் வருந்தினர். ஆயினும், தீசியசு கடமையே பெரிதெனத் தன் செலவினைத் தொடர்ந்தான்.

### கட்டுரைக் குறிப்பு

I தீசியசிற்கு வியத்தகு விருந்து கிடைத்தல்.

1. முன்னுரை. 2. நீர்நிலையினருகே கண்ட காட்சி. 3. தீசியசு அயர்ச்சியுடன் உறங்குதல். 4. கோதையரும் கோவலரும். 5. புகழ் பாடுதல். 6. வியத்தகு விருந்து. 7. முடிவுரை.

---

## 4. வல்லவர்க்கு வல்லவன்

தீசியசு நெடுந் தொலைவு நடந்து கடல் கண்ணுக்கு எட்டுமிடத்திற்குச் சென்முன். கொரிந்துக் கோட்டை மிகவும் உயர்ந்த இடத்தினின்றும் காணப்பட்டது. அவன் நில இணைப்பை மிகவும் விரைவாகக் கடந்து சென்முன். என்னெனில், அவனது உள்ளம் கொடியவனுகிய சினிசைக்கண்டு அவனைத் தக்கவாறு ஒறுப்பதற்குத் துடித்துக் கொண்டிருந்தது. வழியில் ஒரு பெரிய பைன் மரக் காடு தென்பட்டது. தீசியசு மிகவும் சினத்துடன் அதற்குள் நுழைந்தான். அக் காட்டிற்கு இரு புறமும் பாறைகள் காணப்பட்டன. அவ்விடத்தில் நில இணைப்பு மிகவும் குறுகலாக அமைந்திருந்தது. அங்கு ஒரு கல்லின் மீது சினிசு அமர்ந்திருந்தான். அவன் ஒரு பெரிய மரத்தைக் குண்டாந்தடி போல் தன் முழந்தாள்களின் குறுக்கே வைத்திருந்தான். அவனருகில் ஒரு வடக்கயிறு ஆயத்தமாகக் கிடந்தது. அவனுடைய தலைக்கு மேல் பைன்மரக் கிளைகளில் அவனுல் கொல்லப்பட்ட மக்களின் எலும்புகள் தொங்கிக் கொண்டிருந்தன.

அவனைக் கண்டவுடன் தீசியசு ஆரவாரத்துடன் கொதித்தெழுந்து, “அடே, கொலை புரியும் கொடியவனே, எனக்காகவும் நீ இரண்டு மரங்களை ஆயத்தமாக வைத்திருக்கிருயோ?” என்று வினவினுன்.

சினிசு தன் இருக்கையினின்றும் குதித்தெழுந்தான். “அடே பொடியா, என் தலைக்கு மேல் பார். உன்னைப்போன்ற எத்தனை பேருடைய எலும்புகள்

தொங்குகின்றன? என்னுடைய புலால் அறை வெறுமையாகிவிட்டது. நான் உனக்காக இரண்டு மரங்களை ஆயத்தமாக வைத்திருக்கிறேன் வா,'' என்று கூவிக் கொண்டே, தன் மரத் தடியை ஓங்கிய வண்ணம் தீசியசின் மீது பாய்ந்தான். தீசியசும் 'தன் இரையை விரும்பி எழுந்த புலி போல்' அவன்மீது பாய்ந்தான்.

இருவரும் ஒருவரை யொருவர் அவர்களைச் சூழ்ந்திருந்த காடுகளும் மலைகளும் அதிருப்படித் தாக்கினர். ஆயினும் தீசியசின் வெண்கலத் தடியின் தாக்குதலைச் சினிசின் மரத்தடியால் தாங்கக் கூடவில்லை. சினிசின் மரத்தடி குறுக்கே முறிந்து வீழ்ந்தது. அதே நேரத்தில் தீசியசு தன் தண்டத்தால் சினிசின் முகத்தை நோக்கித் தாக்கினான். அவன் அத்தாக்குதலைத் தாங்கக் கூடாமல் கலங்கிக் கீழே வீழ்ந்தான். தீசியசு அவன்மேல் பாய்ந்து அருகிலிருந்த அவனது வடக்கயிற்றை எடுத்து அவனை இறுகப் பிணித்தான்.

"அடே அறிவிலி, முற்பகலிலே நீ பிறர்க்குத் துன்பம் செய்தால், பிற்பகலிலே உனக்குத் துன்பம் தானே வரும் என்பதை நீ அறியாய் போலும்,'' என்று தீசியசு அவனிடம் கூறினான்.

பிறகு, தீசியசு இரண்டு பைன் மரங்களை ஒன்றாக வளைத்து, அவற்றிற்கிடையே சினிசைக் கட்டினான். சினிசு தன் கால்களையும் கைகளையும் உதறிக் கொண்டு கெஞ்சினான்; கதறினான். ஆயினும் தீசியசு இரக்கம் காட்டவில்லை. மக்களுக்குத் தீங்கு செய்பவரைக் கொல்லுதல் நல்ல வினை நிலத்திலே



இருவரும் ஒருவரையொருவர் அவர்களைச் சூழ்ந்திருந்த காடுகளும் மலைகளும் அதிரும்படித் தாக்கினர்.

தோன்றும் களைகளைப் பிடுங்கி எறிவதுபோலாகும் என்று நினைத்தான் தீசியசு. எனவே அவனை வளைக்கப்பட்ட மரங்களோடு இறுகப் பிணித்தபின் தீசியசு அம்மரங்களை அவற்றின் போக்கிலே விடுத்தான். அவை இரண்டும் திடீரென மேலெழுந்து நிமிர்ந்தபோது அவற்றுக்கிடையே பிணைக்கப்பட்டிருந்த சினிசின் உடல் இரண்டு கூருகப் பிய்க்கப் பட்டு, அங்கு வட்டமிட்டுக்கொண்டிருந்த காக்கைகளுக்கும் கழுகுகளுக்கும் இரையாயிற்று.

பிறகு தீசியசு குன்றுகளுக்கிடையே மெகாராவை நோக்கி, சரோனிக் கடலை ஒட்டியே சென்று கொண்டிருந்தான். ஓரிடத்தில் மலைக்கும் கடலுக்கும் இடையே வழி குறுகலாகச் சென்றது. அங்குச் செல்வோருடைய செலவு தடைப்படும்படியாகக் கற்கள் குவிக்கப்பட்டிருந்தன. அதனைக் கண்ணுற்ற தீசியசு அருகிலிருந்த சிகரத்தை நோக்கினுன். அச்சிகரத்தின்மேல் ஒரு விலங்குமகன் வீற்றிருந்தான். அவனுடைய மடியின்மீது ஒரு வலிய பெரிய குண்டாந்தடி காணப்பட்டது. இவன்தான் கோவலர் கூறிய சுகிரோனுக இருக்கவேண்டும் என்று தீசியசு எண்ணினுன்.

உடனே அஞ்சா நெஞ்சினனுகிய தீசியசு அச்சிகரத்தின்மீது ஏறி அக்குண்டாந்தடியன் இருக்குமிடத்திற்குச் சென்றுன். தீசியசைக் கண்டதும் சுகிரோன் எழுந்து நின்றுன்.

தீசியசு சுகிரோனை நோக்கி, "என்ன உன் ஆமைக்கு விருந்து நடத்த விரும்புகிருயா? உன்

கால்களைக் கழுவுவதற்கு ஆள்வேண்டுமா?'' என்று வினவினான்.

என்னெனில், சுகிரோன் அவ்வழியாக வருகின்றவர்களை மடக்கிச் சிகரத்தின் உச்சிக்கு அழைத்துச் செல்வான். அங்குள்ள நீரூற்றில் தன் கால்களைக் கழுவுமாறு கூறுவான். அவ்வாறு அவர்கள் கழுவிக்கொண்டிருக்கும்போது, அவர்களை மலை முகட்டிலிருந்து மறுபுறமுள்ள பாதாளத்தில் தள்ளி விடுவான். இச் செய்திகளைத் தீசியசு கோவலர்கள் வாயிலாகக் கேள்விப்பட்டிருந்தான்.

தீசியசின் அஞ்சாமையைக் கண்ட சுகிரோன் கடுஞ்சினங்கொண்டான்; ஆரவாரித்தெழுந்தான். ''ஆம். என்னுடைய ஆமை பசியுடன்தான் உள்ளது; என்னுடைய கால்களை இன்று கழுவவேண்டியவன் நீதான்; வா,'' என்று தீசியசை அழைத்தான்.

தீசியசு தன்னுடைய வெண்கலத் தண்டத்தை ஓங்கியபடி சுகிரோன்மேல் பாய்ந்தான். சுகிரோனும் தன் மரத்தடியால் தாக்கினான். ஆனால் வெண்கலத் தண்டத்தின் தாக்குதலை மரத்தடி தாங்கக்கூட வில்லை. அதனைக்கண்ட சுகிரோன் தன் தடியை எறிந்துவிட்டு, தீசியசுடன் மற்போர் புரிந்தான். தீசியசு மற்போரில் தன் மாற்றானுக்கு இளைத்தவனா? தன் வலக்கையால் அவனுடைய தொண்டையைப் பற்றிக்கொண்டு, முழந்தாளைத் தன் கால்களால் இடுக்கிப் பிடியாகப் பிடித்துக்கொண்டு, தன் முழு வலிமையுடனும் அவனைப் பாறையின்மீது தள்ளி ஒரே அழுத்தாக அழுத்தினான். சுகிரோன் மூச்சுவிட முடியாமல் திணறினான்.



" நீ விதைத்த வினையை நீயே அறு."

"ஐயனே, என்னை விட்டுவிடும். உம்முடைய வழியில் நான் குறுக்காக நிற்கமாட்டேன்," என்று சுகிரோன் வேண்டினன்.

"நீ எத்தனை பேரைக் கொன்று தீர்த்தாய்? அதற்காக நான் உன்னைத் தக்கவாறு ஒறுக்கவேண்டும். அப்பொழுதுதான் இவ்வழியிலே நல்லவர்கள் அஞ்சாமல் செல்லுதல் கூடும்," என்று கூறித் தீசியசு அவனை மேலும் பாறையோடு கீழே உருட்டினன். தலைகீழாகப் புரண்ட சுகிரோனைத் தீசியசு மீண்டும் தூக்கி நிறுத்தி, "நீ என் கால்களைக் கழுவி விடு; இல்லாவிட்டால் நான் இந்த வாளால் உன்னைக் கூறுகூருகப் பிளந்துவிடுவேன்," என்று அச்சுறுத்தினன்.

சுகிரோன் உடம்பெல்லாம் பாறையிலே உராய்ந்து குருதி கொப்பளித்துக்கொண்டிருந்தது. அவன் நடுங்கிக்கொண்டே தீசியசின் கால்களைக் கழுவினன். அவன் அவ்வாறு தன் கால்களைக் கழுவி முடிந்ததும், "நீ விதைத்த வினையை நீயே அறு," என்று கூறி, தீசியசு அவனை ஒரே எற்ருக மலை முகட்டினின்றும் எற்றி மறுபுறத்தில் பாதாளத்திலிருந்த கடலினுள் தள்ளிவிட்டான்.

பின்னர், தீசியசு மெகராவைக் கடந்து ஆத்திக் காவிற்குள் ஒரு பகல் முழுவதும் நடந்து எல்யூசிசு நகரினுள் புக்குப் பொதுமன்றத்தை அடைந்தான். அங்கு வீறுகொண்டெழுந்த காளைபோல் நின்றுகொண்டு, "இந்நகரத்தை ஆளுகின்ற கற்குவான் என்னும் வேந்தன் யாண்டுளன்? யான் அவனேடு

இன்று மற்போர் புரிதல் வேண்டும்,'' என எக்காள மிட்டான்.

நகர மாந்தரெல்லாம் ஆண்டுக் கூடினர். "என்னே இக்கொடுமை! எழில்மிக்க இளையோய், நீ இவ்வாறு இறக்கத் துணிந்தது என்? வேற்றான் ஒருவன் எம் நகரத்துள் உளன் என்பதை எம் வேந்தன் அறிவதற்குமுன் நீ இங்கிருந்து தப்பி ஓடிவிடு,'' என்று தீசியசை அவர்கள் வேண்டினர். ஆயின், அவன் அவர்களது வேண்டுகோளைப் பொருட்படுத்தாமல் நகரத்தினுட் புகுந்து சென்றான். அவனைக்கண்டவர் யாவரும் உளங்கரைந்து "காக்க நின்னுயிர்'' என வேண்டினர். அவன் ஏறுபோல் பீடு நடையிட்டுக் காவலனின் வாயிலைச் சென்றடைந்தான். அதனையும் கடந்து எலும்புகளும் தலையோடுகளும் குவிக்கப்பட்டிருந்த முற்றத்தின் வழியே கற்குவான் பெருமனைக்குள் நுழைந்தான். தம் உயிர் மீது தினையளவு பற்றுடையார் யாரும் அவ்விடத்திற்குச் செல்லத் துணிய மாட்டார். ஆயினும், தீசியசு தனக்கு வேட்டம் கிடைத்ததென்று விரைந்து சென்றான்.

அங்குக் கற்குவான் ஒரு நெடிய கைம்மேடையின் முன் அமர்ந்திருந்தான். அதன் மேல் ஒரு செம்மறி முழுமையாகப் பொசுக்கி வைக்கப்பட்டிருந்தது. அவனுக்குப்பின் ஒரு பெரிய தாழியில் முந்திரிகைப் பிழிவு நிறைக்கப்பட்டிருந்தது. தீசியசு அவ்வறையின் வாயிலில் நின்று, "மற்போர் மறவரே, இன்று நீர் என்னுடன் பொருவீரோ?'' என்று கற்குவானை மல்லுக்கிழுத்தான்.

கற்குவான் தலையை நிமிர்த்தி வெடிபடச் சிரித்தான். "ஆகா, புரிவோம்; வருக நான் இங்குத் தனியாகவே இருக்கிறேன். நீயும் களைப்புற்று வந்திருக்கின்றாய். முதலாவதாக, நன்கு விருந்துண்டு, குடித்து மகிழ்க. பின்னர் இறக்க," என்று பெருமிதத்தோடு பகர்ந்தான்.

பனங்காட்டு நரி சலசலப்புக்கு அஞ்சுமா? தீசியசு மதர்த்த வேழம்போல் மயங்காது சென்று கற்குவானின் முன்பாக அமர்ந்தான். இருவரும் தமக்கு வேண்டுமளவு மறியின் புலாலைத் தின்று பிழிவினை மாந்தினர். தீசியசு மூன்று போர் மறவர் தின்னுமளவு தின்றான்; ஆயின், கற்குவான் ஏழு பேர் தின்னுமளவு தின்றான்.

வயிறு புடைக்கத் தின்ற பின், கடுங்கண் வேந்தன் கற்குவான் எழுந்தான். "நாம் உறங்குதற்குச் செல்லுமுன் ஒரு முறை பொருவோம்," என்றான்.

எனவே, இருவரும் தத்தம் மேலாடைகளைக் கழற்றி எறிந்தனர்; அரண்மனை முற்றத்தை அடைந்தனர். அங்குக் குவிக்கப்பட்டிருந்த எலும்புகளுக்கு இடையே திறந்த வெளியில் புது மணல் பரப்புமாறு வேந்தன் தன் ஏவலரைப் பணித்தான். அப் புது மணற் பரப்பில் மல்லர் இருவரும் ஒருவரையொருவர் எதிர்த்து நின்றனர். காட்டு மாவின் கண்களைப் போல இருவருடைய கண்களும் கண்டோர் கலங்கும் வண்ணம் ஒளிர்ந்தன. எல்யூசிசின் மக்கள் யாவரும் அரண்மனை வாயிலில் நின்று, "நடப்பது யாதோ?" என மருண்டு நோக்கினர்.



மல்லர் இருவரும் ஒருவரோடொருவர் மலையத் தொடங்கினர்.

மல்லர் இருவரும் ஒருவரோடொருவர் மலையத் தொடங்கினர். அப்பொழுது மலைகள் இரண்டு தமக்குள் மாறுபட்டுப் பொருவது போலிருந்தது.

கற்குவான் மற்போரில் நூற்றுக்கணக்கான வரைக் கொன்று குவித்தவன். ஆயினும், தீசியசிடம் அவனது கைவரிசை ஏறவில்லை.

தீசியசு விரைவுத் தன்மையில் கற்குவானை மிஞ்சினன். எனவே, அவன் கற்குவானை இடை யோடு பற்றிச் செந்தூக்காகத் தூக்கித் தலைகீழாக ஊன்றி விட்டான். கற்குவான் தோள் முறிய வீழ்ந்தான். தீசியசு இமைத்தவர் விழிக்குமுன் அவன்மீது பாய்ந்து அவனை மண்ணோடு மண்ணாய்ப் புதையும்படி அழுத்திக் கொண்டு, "தோல்வியை ஒப்புக்கொள்; இல்லாவிடில் கொன்றுவிடுவேன்," என்றான், ஆயினும் கற்குவானின் வாயினின்று ஒரு சொல்லும் பிறக்கவில்லை. என்னெனில், கற்குவான் தான் உண்ட புலாலையும் அருந்திய பிழி வினையும் கக்குவான் போலத் திருதிருவென விழித் தான். மான உணர்வும் அவன் வீழ்ந்த வீழ்ச்சியும் அவனுடைய இதயத்தைக் கசக்கிப் பிழிந்தன.

மறு நொடியில் தீசியசு அரண்மனையின் வாயிற் கதவங்களைத் திறந்து, நகரமாந்தரை உள்ளே அழைத்தான். அவர்கள் தீசியசை வாழ்த்தி, "வெற்றி வேந்தே, இன்றோடு எமது கொடுங் கோலன் தொலைந்தான். நும் தோள்வலி வென் றது. நீரே எம்மை ஆளுதல் வேண்டும். நும் கொற்றம் நீடு வாழ்க," என இறைஞ்சி வேண் டினர்.

“நும் வேண்டுகோளை நாம் ஏற்றுக்கொள் வோம். நுமக்கு நல்லாட்சி நல்குவோம். அதன் பொருட்டே நாம் தீயனசெய்த சினிசையும் சுகிரோனையும் கொன்றோம். இன்று இம் மாமல்லனையும் வென்றோம்,” என்று தீசியசு எல்யூசிசின் நகர மாந்தர்க்கு அடைக்கலம் அருளினான்.

அவர்களுள் மூத்தோனாகிய ஒருவன் தீசியசின் முன்தோன்றி, “இளையருள் ஏறுபோல்வோய், நீ சினிசைக் கொன்று விட்டாயா? நன்று, நன்று. எனினும் ஏதென்சு நகரத்துப் பெருவேந்தன் ஈதியசிடம் செல்வாயெனின் கவனமாக நடந்து கொள். என்னெனில், அவன் சினிசுடன் குருதித் தொடர்புடைய உறவினன்,” என்று எச்சரித்தான்.

“அவ்வாறாயின் நான் என் உறவினனையே கொன்றிருக்கிறேன். எனினும், குற்றமில்லை. அதற் காக யார் என்னைப் பழிவாங்கக் கூடும்? அவன் நீதிக்கும் நேர்மைக்கும் புறமானவன். அவனை நான் கொன்றது யாவர்க்கும் நன்று; நேரிது மாகும்,” என்றான் தீசியசு.

அதனைச் செவிமடுத்த முதுபெருங் கிழவன், “ஐயனே அதுவே ஆண்மையுடையார் செயல். எனினும், எம் நகர்ப்புறத்தே பாய்கின்ற வெள்ளி யாற்றில் நீராடி வருவாயெனின் நீ செய்த கொலைப்பழி எல்லாம் நீங்கித் தூய்மைபெறுவாய். பின்னர் எம் நகரத்திற்கு மன்னனாக நீ மணிமுடி கவிப்பாய்,” என்று அறவுரை பகர்ந்தான்.

வழுக்கல் உடையபொழுது ஊன்றுகோல்போல் உதவுவன விழுப்பம் உடையவர் வாய்ச்சொல் என்

பதைப் பழுதற உணர்ந்த தீசியசு அம்முதியவர் வேண்டியவாறு செய்து, எல்யூசிசின் நகர மாந் தர்க்கு நல்லாட்சி வழங்குவதாக வாய்மொழி பகர்ந்து அரியாசனம் ஏறினன். அந்நகர மாந்த ரும், "யாம் அனைவரும் இன்றுமுதல் நின் குடிகளாக நின்னிடம் கடமைபூண்டு ஒழுகுவம்," என உறுதி மொழி உரைத்தனர்.

தீசியசு இப்பொழுது எல்யூசிசின் மன்னன் ஆயினன்; எனினும், தான் எடுத்த வினையை இனிது முடித்தற்கு மறுநாட் காலையிலேயே புறப்பட்டான்.

அவனுடைய குடிகள் அவனை வல்லவர்க்கு வல்லவன் எனப் போற்றினர்.

## கட்டுரைக் குறிப்பு

1. சினிசைக் கொல்லுதல்.
   1. முன்னுரை. 2. தீசியசு சினிசைக் காணுதல். 3. போர்க்காட்சி. 4. சினிசு கொல்லப்படுதல். 5. முடிவுரை.
2. சுகிரோனைத் தொலைத்தல்.
   1. முன்னுரை. 2. தீசியசு சுகிரோனிடம் செல்லுதல். 3. மற்போர் புரிதல். 4. சுகிரோனை மலைச்சரிவில் தள்ளுதல். 5. முடிவுரை.
3. தீசியசு எல்யூசிசின் மன்னனாதல்.
   1. முன்னுரை 2. எல்யூசிசை அடைதல். 3. மன்னனைக் காணுதல். 4. விருந்து உண்ணுதல். 5. உண்மை வென்றது. 6. மக்களின் மகிழ்ச்சி. 7. தீசியசு மன்னனாதல். 8. முடிவுரை.

## 5. கயமையின் வீழ்ச்சி

தன் குடிமக்களை விடுத்து நீங்கிய வல்லவர்க்கு வல்லவன் தீசியசு பார்னீசு மலைத் தொடரின் அடிவாரத்தில் செபிசிசுப் பள்ளத்தாக்கின் ஓரமாக நடந்து சென்றான். அப்பொழுது அவன் மிகவும் ஆரவாரத்துடன் உடை உடுத்துக் கொண்டு ஒருவன் வருவதைக் கண்டான் அப் புதியவன் மிகவும் உயரமும் வலிமையும் உடையவனாகக் காணப்பட்டான். அவன் தன் கைகளில் பொற் கடயங்களும் மார்பில் மாணிக்கம், மரகதம், வைரம், வைடூரியம், கோமேதகம் ஆகிய பன்னிற மணிகளும் பாங்குறப் பதிக்கப் பெற்ற பொன்மாலையும் அணிந்திருந்தான். அவனைக் கண்டவர் யாவரும் அவனைப் பெருஞ் செல்வனென மதிப்பாராயின் அதில் தவறொன்றும் இல்லை. அவன் தீசியசைக் கண்டதும் அவனிடம் பெருமிதத்தோடு வந்து, முன்னரே அறிந்தவன் போல் பணிவோடு வணங்கி, இரு கைகளையும் நீட்டி, "ஆற்றலும் அழகும் ஒருங்கு அமையப் பெற்ற இளஞ்சிங்கமே, வருக, வருக. இக் குறிஞ்சிநிலம் நும் வருகையால் சிறப்புற்றது. நின்னைக் கண்டதால் என்னுள்ளம் எத்துணை இன்பம் எய்துகிறது! முன்பின் அறியாத ஒருவர் தம் இல்லத்திற்கு வருவாராயின் அவரை வரவேற்று அவரோடு ஒருங்கு இருந்து உண்ணுதலினும் உயர்ந்த சிறப்பு யாது உள்ளது? தம்பி, நான் பேசிக்கொண்டே போகிறேன். நீயோ களைப்பாக இருக்கிறாய். அருகிலே உள்ள என்

கோட்டைக்குள் வா. அங்கு இளைப்பாறிச் செல்ல லாம்,'' என்று எதிர்பாராத வகையில் வரவேற்ருன்.

தீசியசிற்கு அவ்வரவேற்பு புதுமையாகத் தோன்றிற்று. எனினும், அவன் பண்புடையனு கலின் அவ்வரவேற்பாளனை நோக்கி, ''ஐயனே, நின் வரவேற்பு நன்று, நன்று. எனது நன்றி. ஆயினும், நான் இப்பள்ளத்தாக்கின் கடைக் கோடியிலுள்ள 'அபிதுனுய்' என்னும் நகரத்திற்கு விரைந்து செல்லுதல் வேண்டும். எனவே, உம் அரிய விருந்தினை ஏற்றுக் கொள்ள முடியாததற்கு வருந்துகிறேன். மிக்க வணக்கம்,'' என்று சொல்லித் தன் வழியே செல்லத் தொடங்கினுன்.

ஆயினும், அப்புதியவன் அத்துணை எளிதாகத் தீசியசை விட்டு விடுவதாகத் தோன்றவில்லை.

''ஐயனே, மறுக்காமல் வருக. சுவைமிக்க மானின் புலாலும், மணமிக்க தேம்பிழிவும் உன் களைப்பினை நீக்கக் காத்துக் கொண்டிருக்கின்றன. அம்மட்டோ? எனது புகழ்வாய்ந்த மெல்லணையில் துயின்றவர் யாவரும் அதன் சிறப்பை நன்கு அறிவர். நீயும் அவ்வணையில் துயின்று இதுவரை அறியாத இன்பத்தை அறியலாம். அவ்வணையின் சிறப்புக்களில் ஒன்றினை நான் உனக்குக் கூறவிரும்புகிறேன். ஒருவர் எத்துணை நெடியராயினும் குறியராயினும் அவ்வணைக்குத் தக்க அளவு உரியராவர். மயிரளவும் அவரது அளவு அணையின் அளவிலும் வேறுபடாது. மேலும், இதுவரை அவர்கள் உறங்காத முறையில் உறங்குவர்,'' என்று தான் விருந்தினரை நடத்தும் சிறப்புக்களைச் சீரோடு

செப்பிய அச்செல்வன் தீசியசின் இரண்டு கைகளையும் பற்றிக்கொண்டு தன்னுடன் வருமாறு வற்புறுத்தினன்.

தீசியசு செய்வதறியாது சற்றுத் திகைத்தான். அவன் தான் செல்லவேண்டிய இடத்திற்கு விரைந்து செல்லவே எண்ணினன். எனினும் இத் துணைப் பரிவன்போடு வரவேற்கும் ஒருவரை மறுத்துச் செல்வது மாண்புடையதன்று என மயங்கினன். அன்றியும் அவ்வருளாளன் கூறும் அரியதொரு மெல்லணையைக் காணவும் விழைந்தான். அவ்வேளையில் அவனுடைய பசியும் வயிற்றைக் கிள்ளிற்று; களைப்போ கண்களை மறைத்தது. வரவேற்பை ஏற்றுக்கொள்வதே தக்கதென நினைந்தான். ஆயினும், அதேநேரத்தில் அவனது உள்ளத்தில் அவனை அறியாமலே அப்புதியவனைப் பற்றிய ஓர் ஐயப்பாடு அலைவுற்றுக் கொண்டிருந்தது. அவனது குரல் இனிமையும் மென்மையும் உடையதாய்த் தோன்றினும் அதனுள் மறைந்து கிடந்த மாயம் ஒருவாறு புலப்பட்டது. அவனுடைய கண்கள் மென்மையோடு காணப்படினும் கயமையும் ஊடுருவித் தோன்றிற்று. 'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை' என்று தீசியசு தயங்கினன். ஆயினும், அவனது இளமை முறுக்கு அவனை அஞ்சா வேட்டத்தினுள் ஈர்த்தது. 'நடப்பது நடக்க' என்று தனக்குள் கூறிக்கொண்டே தீசியசு அப்புதியவனுடன் போதற்கு இணங்கினன். தீசியசை நிழல் மண்டிக் கிடக்கும் நெடிய சிகரங்களுக் கிடையே பார்னீசு மலையுச்சிக்கு அப்பசப்பு மொழியான் அழைத்துச் சென்றான்.

அப்பொழுது அவனுடைய பார்வை அச்சிகரங்களுக்குக் கீழே நெடுவழியில் சென்று கொண்டிருந்த வழிப்போக்கர் மீது பட்டது. அவர்கள் தங்களுடைய வணிகச் சாத்துக்களைக் கழுதைகள் மீது ஏற்றிக்கொண்டு சென்றனர்.

அவர்களைக் கண்ட அப்புதியவன், "ஐயகோ, இது என்ன கொடுமை. அறிவிலாப் பேதையர். நல்ல வேளையாக நான் அவர்களைப் பார்க்க நேர்ந்தது. உடனேசென்று நான் அவர்களை அழைத்து வருகிறேன். நீ சற்று இவ்விடத்திலேயே நில். நான் விரைவில் வருகிறேன்," என்று அவன் தீசியசை அங்கு விடுத்து, குன்றுகளுக்கிடையே கீழ்நோக்கி ஓடினன்.

தீசியசு மேலும் தொடர்ந்து மேலே சென்று கொண்டிருந்தான். அப்பொழுது ஒரு முதியவன் எதிர்ப்பட்டான். அவன் அத் தனித்த இடத்தில் சுள்ளிகளைப் பொறுக்கிக் கொண்டிருந்தது தீசியசிற்கு வியப்பினைத் தந்தது. தீசியசு அவனை நெருங்கிச் சென்ருன். அம் முதியவன் தீசியசை நோக்கி, "அன்புமிக்க தம்பி, யான் யாண்டிலே முதியவன். நான் மூப்பினுல் நலிந்தும் மெலிந்தும் இருக்கின்றேன். ஆகையால் இவ்விறகுக் கட்டினை என்னுல் தூக்க முடியவில்லை. சற்று உதவிசெய்," என்ருன்.

தீசியசு உடனே அவ்விறகுக்கட்டினை அவன் தோள்மீது தூக்கி வைத்தான். அம்முதியவன் தீசியசைக் கூர்ந்து கவனித்தான். பின்னர், அவனை இரக்கத்துடன் நோக்கி, "எழில் மிக்க இளையோய்,

நீ யாவன்? நீ ஏன் இக் கொடிய வழியிலே வருகின்றாய்?'' என்று வினவினன்.

"பெரியீர், நான் யாவன் என்பதை என்னைப் பெற்றவரே அறிவார். நான் இந்த அவலமிக்க காட்டிடையே நடப்பது என்னெனில் என்னை ஓர் அருளாளன் உண்ண உணவும், உறங்க ஒரு மெல்லணையும் அளிப்பதாக அழைத்துள்ளான். அதன் பொருட்டே செல்லுகின்றேன்,'' என்றான்.

"கொடுமை, கொடுமை; அவனுக்கு அருநரகே கிட்டும். அடே பாவி, எத்தனை பேரைத்தான் நீ தின்று தீர்ப்பது. உன்வயிறு என்ன இடுகாடா? அல்லது சுடுகாடா? வருகிறவரையெல்லாம் வரவேற்கிறதே!'' என்று அம்முதியவன் உணர்ச்சி ததும்பப் பேசினன்.

தீசியசு, "பெரியவரே, விளங்கக் கூறும். நீர் ஏன் இவ்வளவு ஆத்திரப்படுகின்றீர்?'' என்று வினவினன்.

"அப்படிக்கேள் தம்பி, சொல்லுகிறேன். உன்னை அழைத்து வந்திருக்கின்றானே, அந்த அருளாளன், அவன் வழிப்போக்கரைக் கொள்ளையடித்து அவரது பொருளையெல்லாம் வெளவிக் கொண்டு அவரைத் தன் படுக்கையில் கிடக்கச் செய்து கொன்று தின்றுதீர்ப்பான்,'' என்றான் அம்முதியவன்.

"முதியவரே, நீர் தக்கநேரத்தில் எச்சரித்ததற்கு நன்றி. அந் நரிமுகத்தான் தான் கொன்று தின்ன விரும்பியவரை வரவேற்கின்ற முறை மிகவும்

வியப்பாகத்தான் உள்ளது. என்றாலும், அவன் தன் மெல்லணையைப் பற்றி வியந்து பேசுகின்றானே! அது ஏன்? விளங்கக் கூறும்,'' என்று வினவினான் தீசியசு.

"ஐயனே, அம்மெல்லணை வியக்கத் தக்கது தான். அது யாரையும் பொருந்த ஏற்றுக்கொள்ளும். என்றாலும் அதன்மேல் ஒருமுறை படுத்தவர்கள் இதுவரை மீண்டும் எழுந்ததே கிடையாது,'' என்று முதியவன் அம்மெல்லணையின் சிறப்பை விளக்கத் தொடங்கினான்.

மீண்டும் தெளிவு பெறாத தீசியசு, "அது ஏன்? அவ்வணையின் மீது கிடப்பார்க்கு யாது நிகழும்?'' என்றான்.

"தம்பி, அதன்மேல் படுத்தவர்கள் அதனினும் நெடியவராயின் அவரது கால்கள் அக்கொடியவனால் வெட்டப்படும். அவர்கள் குறியவராயின் அத் தடியன் அவர்களை அடித்து அடித்து நீட்டுவிப்பான். இவ்வாறு இவன் நீட்டுவிப்பதனாலேயே உலகம் இவனை, 'நீட்டுவிப்பான் புராக்ரெசுடீசு' என அழைக்கின்றது. நான் ஒருவன்தான் அக்கொடுமையினின்றும் தப்பியவன். என்னெனில், எனது நெடுமை அப்படுக்கையின் நெடுமையோடு மயிரளவும் வேறுபடாது ஒத்திருந்தது. ஆகவே, அவன் என்னை நீட்டலும் குறுக்கலும் செய்யாது விடுத்தான். ஆயினும், அவன் தனக்கு வேண்டிய குற்றேவல்கள் அனைத்தும் செய்தற்கு என்னை ஓர் அடிமையாக வைத்திருக்கின்றான். நான் ஒரு காலத்தில் செல்வமிக்க வணிகனாக தீப்சு நகரத்தில்

வாழ்ந்தவன். இன்று இவ்வல்லரக்கனுக்காக விறகு வெட்டவும், நீர் இறைக்கவும் பிற கடிய வேலேகள் செய்யவும் வற்புறுத்தப்படுகிறேன். நீட்டலும் குறுக்கலும் எனக்கு இல்லாது போயிற்று. ஆயினும் மெலித்தல் விகாரம் என்னே விட்டபாடில்லே,'' என்ருன்.

இச் செய்தியைக் கேட்ட தீசியசிற்குச் சினம் பொங்கி எழுந்தது. தன் பற்களே நறநற வெனக் கடித்தான். அவனது கண்கள் சிவந்தன. தோள்கள் விம்மின. அவ்வலியவனேக் கொன்று மெலியவரைக் காக்க விரும்பினுன்.

தீசியசின் இளமையைக் கண்ட அக் கிழவன், "தம்பி, நீ உன் இளமையை வீணுக்கிவிடாதே; இங்கிருந்து தப்பி ஓடிவிடு. ஆயினும், தப்புவதற்கு வழி எங்கே இருக்கிறது? இச் செங்குத்தான சிகரங்களே நீ எவ்வாறு கடப்பாய்?'' என்று வருந்திக் கூறினுன் அக்கிழவன்.

"பெரியவரே, தப்பியோட வேண்டிய தேவையில்லே. நீர் வருந்தவேண்டாம்,'' என்று சொல்லிவிட்டுத் தான் வந்த வழியே நோக்கிக் கீழே இறங்கினுன். அதனேக்கண்ட அக்கிழவன், "நான் உன்னே எச்சரித்ததாக மட்டும் அவனிடம் கூறிவிடாதே. நீ அவ்வாறு கூறுவாயாயின் அவன் என்னேக் கொல்லாமல் கொன்று குழி தோண்டிப் புதைப்பான்,'' என்று அக் கிழவன் தீசியசை நோக்கிக் கத்தினுன்.

தீசியசு அவனுக்கு விடையிறுக்காமல் புராக்ரெசுடீசைக் கண்டு தன் சினத்தைத் தீர்த்துக்

கொள்ள விரைந்தான். "இந்த நாட்டில் நல்லாட்சி நடைபெறவில்லை. தீயவரை ஒறுத்து நல்லவரை வாழ்விக்க அரசு முன்வரவில்லை. அதனை நானே செய்கின்றேன்," என்று அவன் கூறி முடிக்கு முன் புராக்ரெசுடீசு வணிகக் குழுவினரைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு மிக மகிழ்ச்சியோடு எதிர்ப்பட்டான்.

அவன் தீசியசைக் கண்டவுடன், "என் அரிய நண்பரே, உம்மை நெடுநேரம் காக்கவைத்து விட்டேன். அனிச்சப் பூவானது மோப்பதனாலேயே குழைந்துவிடும். ஆனால் விருந்தினரோ விருந்து கொடுப்பவர் முகம் மாறுபட நோக்கினாலும் குழைந்து விடுவார். அவ்வாறிருக்க நான் நும்மை நெடுநேரம் காத்திருக்கவைத்தது பெருந்தவறு," என்று புராக்ரெசுடீசு தன் பசப்பு மொழிகளை அள்ளி வீசினான்.

உண்மையை அறிந்திருந்த தீசியசு, "விருந் தளிக்கும் வள்ளலே, நீர் பலரை நும் படுக்கையிலே படுக்கவைத்து நீட்டலும் குறுக்கலும் செய்திருக் கின்றீர். அந் நன்றியை நுமக்குக் காட்டத்தக்க விருந்தினர் யாரும் இதுவரை நும்மிடம் வரவில்லை. எந்நன்றி கொன்றவர்க்கும் உய்தி உண்டாகும். ஆனால், ஒருவர் செய்த நன்றியைக் கொன்றவர்க்கு உய்தியே கிடையாது. இந்த உலகம் நன்கு வாழ வேண்டுமாயின் நீர் பிறர்க்குச் செய்ததை நான் நுமக்குச் செய்யவேண்டும். அதன் பொருட்டே என்னைக் கடவுளர் நும்மிடம் அனுப்பியுள்ளனர். நானும் நும் வரவை எதிர்நோக்கி நிற்கிறேன். வருக, வருக," என்று எள்ளினான் தீசியசு.

இதனைச் செவிமடுத்த சிறுமதியோன் புராக்ரெசுடீசின் முகம் அச்சத்தால் வெளுத்தது. உடனே அவன் தற்காப்பின் பொருட்டுத் தன் வாளை உருவ முயன்றான். ஆயின் தீசியசு அவன்மேல் பாய்ந்து கைகளிரண்டையும் பின்னால் ஏற்றி அவன் வாளைத் தொட முடியாதபடி இடுப்பை வளைத்துக் கட்டிக் கொண்டான்.

"நான் கூறுவது உண்மையானால் ஒப்புக் கொள்; இல்லையானால் மறு," என மும்முறை வினவினான். இடியோசை கேட்ட நாகம்போல் புராக்ரெசுடீசு உள்ளம் நடுங்கினான்; ஒன்றும் உரையாது திருதிருவென விழித்தான்.

தீசியசு அவன் தீயவன் என்பதை தெளிவாகக் கண்டான். எனவே அவனைத் தன் முழு வலிமையோடு உதறிப் பாறையில் தள்ளினான். அடுத்த நொடியில் அவன் தன் வெண்கலத் தடியை வீறு கொண்டு தூக்கினான். அதனைக் கண்ட புராக்ரெசுடீசு அலறியடித்து எழுவதற்கு முயன்றான். அதற்குள் தீசியசின் வெண்கலக் கதை அவனைச் சல்லிசல்லியாகப் பெயர்த்தெறிந்தது. அவனது உயிர் அதனை வரவேற்பதற்காக வாய் பிளந்து நின்ற கொடிய நரகத்தின் இருண்ட வாயிலுக்குள் ஒரு வௌவாலைப் போலக் கத்திக்கொண்டு ஓடி ஒளிந்தது.

இப்போரைக் கண்ட வணிகக் குழுவினர் அவ்விடத்தினின்றும் அஞ்சி ஓடிவிட்டனர். தீசியசு அக்கொடியவனின் உடம்பிலிருந்த அணிகலன்களை எல்லாம் கழற்றிக் கொண்டு அவனது இல்லத்

திற்குச் சென்ருன். வழிப் போக்கரிடமிருந்து கொள்ளேயடிக்கப்பட்ட பொன்னும் பொருளும் அங்கு மலேமலேயாகக் குவிந்து கிடந்தன. அதனேக் கண்ட தீசியசு அவ் வட்டாரத்திலே வாழ்ந்த மலே நில மக்கள் யாவரையும் அழைத்து அப் பொருள் களே அவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தான். தன் உயிரைக் காப்பாற்றிய அம் முது பெருங் கிழவனுக்கு அக் குறிஞ்சி நிலத்தையே உடைமையாக்கிஞன். அவன் ஒன்றை மட்டும் மறந்து விடவில்லே. நூற்றுக்கணக்கானவர் உயிரைக் குடித்த புராக் ரெசுடீசின் படுக்கையை அடித்து நொறுக்கி அடுப் பிலிட்டு எரித்தான்.

அம்மலேநில மக்கள் யாவரும் வல்லவர்க்கு வல்லவனே வாயார வாழ்த்தி, தாங்களும் தங்கள் மக்களும் வழிவழியாக அவனிடம் கடமைபூண்டு ஒழுகும் நற்குடிகளாவர் என்று உறுதிமொழி கூறினர். அவனும் அவர்களே நீதி நெறி வழு வாமல் காத்து வருவதாக ஏற்றுக்கொண்டு அவ் விடத்தை விட்டு நீங்கிஞன்.

கயமை வீழ்ந்தது; கடமை காத்தது.

கயமையின் வீழ்ச்சி.

1. முன்னுரை. 2. வலிந்து வரவேற்றல். 3. முதிய வனேக் காணல். 4. முதியவனின் முன்னுரை. 5. வியத்தகு மெல்லணே. 6. நீட்டுவிப்பானின் கொடுஞ்செயல். 7. கயமை வெளிப்படுதல். 8. கயமை தோற்றது. 9. முடிவுரை.

---

## 6. கொல்குறும்பர் கூட்டம்

தீசியசு பார்னிசு மலைகளுக்கு இடையே அமைந்த பள்ளத்தாக்குகளின் வழியே அபிதுனய் நகரத்தை நோக்கி நடப்பானாயினன். மலை முகடு களிலே பனிப்படலமும் முகிற் கூட்டங்களும் ஆங்காங்கு உலவித் திரிந்தன. வானத்தை எட்டித் தொடுகின்ற நெடிய மரங்களும், பருத்த தூறுகளை யுடைய குறிய மரங்களும், நன்மணம் வீசுகின்ற கோட்டுப் பூவும், கொடிப் பூவும், பாறைகளுக் கிடையே ஓடிச் செல்லுகின்ற ஓடைகளின் அருகில் மலர்ந்துள்ள நீர்ப்பூக்களும் கண்ணுக்குப் பெரு விருந்தாய் அமைந்தன. ஆங்காங்குக் காட்டு மாவும், வரையாடும் கூட்டம் கூட்டமாக மேய்ந்து திரிந்தன. கலைமான்களும் புள்ளி மான்களும் மேட்டு நிலங்களி னின்றும் பள்ளத்தை நோக்கி அணி அணியாகப் பாய்ந்து சென்றன.

நன் மக்களுக்கிடையே நயவஞ்சகர் திரிவது போல அங்கு மிங்கும் நரிகளும் ஊளையிட்டுக் கொண்டு திரிந்தன. பிறர் பொருளை வெளவுதலே வாணிகம் என்று கருதுகின்ற ஒழுக்கமற்றவர்களைப் போல ஓநாய்கள் புதர்களுக்கிடையே வெருவி நோக்கின.

இக் காட்சிகளுக்கிடையே தீசியசு 'எடுத்த வினையை இனிது முடித்தற் பொருட்டு' விரைந்து சென்று கொண்டிருந்தான். அப்பொழுது கார் காலம்; ஆகையால் சோவென மழையும் பொழியத் தொடங்கிற்று. இடையிடையே காட்டாறுகள்

பெருக்கெடுத்து அவனது வழியை மறைத்தன. 'இடுக்கண் வருங்கால் நகுக' என்னும் ஏற்ற முடைய தீசியசு எதற்கும் அஞ்சாமல் மேன்மேலும் முன்னேறினான். தன் வெண்கலத் தடியையும், வாளையும், பொற்பாதுகைகளையும் பாதுகாப்பாகத் தன்னுடன் கொண்டு சென்றான்.

அபிதுனாய் என்னும் இனிய நகரத்திலே பித்தாலிது மரபினைச் சார்ந்த போர் மறவர்கள் வலிய பெரிய எல்மு மரத்தின் கீழ் வாழ்ந்து வந்தனர். தீசியசு அவர்களைச் சென்றடைந்ததும் அவர்கள் அவனுக்கு செபிசிசு ஆற்றில் திருமுழுக்குச் செய்வித்தனர். என்னெனில், சினிசு முதலான தீயோரை வென்ற தெள்ளியன் தீசியசின் புகழ் அவர்களிடையேயும் பரவியிருந்தது. நாட்டிற்கு நல்லன செய்யும் வல்லவனை வரவேற்பதில் அவர்கள் பெருமகிழ்ச்சி கொண்டனர். 'பாம்பின் கால் பாம்பறியும்' என்பது போல மற மாண்புடையவர்களே தம்மைப் போன்ற மாண்புடையவர்களின் திறத்தை அறிவர். எனவே, தீசியசை அவர்கள் பாராட்ட முன்வந்தது இயல்பேயாம். எனினும், மக்கள் உடம்போடு வாழ்ந்த பலரது குருதியை மண்ணிலே கொட்டிய பாவத்தைத் தீர்ப்பதற்கே அவனைத் தூய நீரில் நீராடச் செய்தனர். பின்னர், எல்மு மரத்தடியில் அமைக்கப்பட்டிருந்த பீடத்திற்கு முன்பு அவன் அழைத்துச் செல்லப் பட்டான். அப்பொழுது அவர்கள் அவனுக்காகக் கொழுத்த செம்மறிக் கிடாய் ஒன்றைத் தெய்வத்திற்குப் பலியூட்டிப் பெருவிருந்து நடத்தினர். விருந்

திற்குப் பின்னர் அம்மறவர் தலைவன் அவனை வாழ்த்தி வழியனுப்பினான்.

பின்னர், அவன் ஆசரனைப் பள்ளத்தாக்கின் வழியே நடந்து சென்றான். வெள்ளியை உருக்கி வார்த்ததுபோல அவனுக்குத் துணையாக நீரோடை ஓடிக்கொண்டிருந்தது.

“ஒருவன் உலகத்திலே தோன்றுவானாயின் அவன் உயர்ந்த புகழ் பெறுவதற்கே தோன்றுதல் வேண்டும். அவ்வாறு புகழ்ச்சிக்குரிய அரிய செயல்களை ஆற்றாதவர் பிறத்தலின் பிறவாமையே நன்று. தீயவரை ஒறுத்து நல்லவரை வாழ்விக்கும் வல்லவனும் தீசியசே அத்தகைய பொன்றாத புகழுக்கு உரியவனாவான். அவன் நீடு வாழ்க,” என்று அத்தீனியச் சமவெளியில் அவனைக் கண்டவர் யாவரும் புகழ்ந்து பாராட்டினர்.

அங்கிருந்து அவன் அத்தீனிய நகரத்தை நோக்கும்பொழுது ஆங்கு ஒரு குன்றின்மீது அத்தீனே என்னும் தெய்வத்தின் கோட்டம் அழகுறக் காட்சியளித்தது.

தொழுவத்திலிருந்து வெளியேறிய கொல்லேறு போல இருமருங்கும் அவன் நோக்கிச் சென்ற காட்சி அத்தீனிய நகரத்திலே பெருந் தெருவிலிருந்த யாவர் உள்ளத்திலும் அவனுக்கென்று ஒரு தனி இடத்தை ஒதுக்கித் தந்தது. அவன் வருகையைக் கேட்ட யாவரும் தெருக்களின் இருமருங்கும், மாடங்களின் மேலும் ஏறி நின்று ஆரவாரித்து வரவேற்றனர்.

தீசியசு தன்னைப் புகழ்பவரை நோக்கிப் புன் முறுவல் பூத்து, கதிர் முற்றிக் குலைசாய்ந்த விளை பயிர்போலத் தலைதாழ்த்திச் சென்றான். அத்தீனியப் பெருநகரம் அவனுக்கு அளப்பரும் பெருஞ் சிறப்புச் செய்து ஆரவாரித்தது; எனினும், அவ்விளைஞனின் உள்ளத்தில் தந்தையைக் காணவேண்டுமென்னும் ஆர்வமும், அவரை எளிதில் காணக்கூடுமோ என்ற கலக்கமும் குதிகொண்டு நின்றன.

ஒருமைப்பாடின்றி மாறுபட்டுக்கூடும் பல கூட்டங்கள் ஒரு நாட்டில் இருத்தல் கூடாது. அரசனுடனேயே இருந்து நாடு பாழாகத்தக்கனவற்றைச் செய்கின்ற உட்பகைஞர் அதனினும் கொடியர். தமக்கு வலிமை மிகுந்தபொழுது வேந்தனுக்கே தீமை விளைக்கத் தயங்காதவர் கொல்வினைக் குறும்பர் எனப்படுவர். இவரெல்லாம் அடக்கி ஒடுக்கப்படத் தக்கவர். இவர்களேயன்றி ஆறலைப்பார், கள்வர், குறளை கூறுவோர் முதலிய மாக்களும், பன்றி, புலி, கரடி முதலிய விலங்குகளும் நாட்டின் உட்பகைகளேயாகும். இத்தகைய உட்பகைகள் ஈதியசின் நாட்டிலே எங்கும் உலவித் திரிந்ததைக் கண்ட தீசியசு மனம் புழுங்கினான். அத்தீய விலங்குகளையும், மாக்களையும் கண்டவிடத்தே கொன்று களைவது நாட்டிற்கு நல்ல தொண்டு என அவன் கருதினான். அதுவே நல்ல பயிர் வளர்தற்குக் களைகளைப் பறிப்பதை ஒத்த செயலாகும். அதனாலன்றி நன்மக்களாகிய பயிர் நல்வாழ்வு பெற்று வாழ்வதென்பது இயலாது போகும்.

ஏதென்சு நகரத்திற்கு வரும் வழியிலேயே தனக்கு எதிர்ப்பட்ட ஆறலைக்கள்வர் அனைவரையும்

தீசியசு தன் தோள்வலியால் ஒறுத்தான். ஆனுல், நகரத்திற்குள்ளே நுழைந்ததும் அவன் கண்டறிந்த செய்திகள் அவன் உள்ளத்தை மிகவும் வருத்தின. அரசனேடு அட்டைபோல ஒட்டிக்கொண்டு நாட்டிற்குத் தீமை செய்யும் நயவஞ்சகரை எங்ஙனம் வெல்வதென எண்ணமிட்டான்.

இவ்வாறு எண்ணியபடியே தீசியசு தன் தந்தையின் அரண்மனையை நோக்கி நடந்தான். அரண்மனையை அடைந்ததும் ஒரு முறை சுற்று முற்றும் பார்த்துத் தன்னை அறியாமல் தனக்குக் கேடு வராமல் காத்துக் கொண்டு நேராக அரசனது இருப்பிடத்திற்குள் நுழைந்தான். அஃது அழகியதொரு வரவேற்பறையாகக் காட்சியளித்தது. அந் நெடிய பெரிய அறையிலே வீணர் பலர் ஒருங்கிருந்து விருந்துண்டு மயக்கப் பிழிவருந்திக் களித்துக் கொண்டிருந்தனர். பண்பொன்றும் அறியாத பாழ் செய்யும் அக்குழுவினரைத் தீசியசு நன்கு ஆராய்ந்து நோக்கினுன். அவர்களுக்கிடையே ஏதென்சு நகரப் பெருவேந்தன் ஈதியசு காணப்படவில்லை. ஆயினும், அங்குக் குழுமியிருந்த யாவரும் விருந்துண்பதிலே கண்ணும் கருத்துமாயிருந்தனர். அவர்களுடைய பேச்சும் சிரிப்பும் அருவருக்கத்தக்கனவாக இருந்தன.

கள்ளின் மேல் காதல் செய்து ஒழுகும் அரசரும் அவரைச் சார்ந்தவரும் எக்காலத்தும் பகைவரால் அஞ்சப்படமாட்டார். அவர்கள் எத்துணைப் பொருளும் படையும் உடையராயினும் அறிவின்மையால் முன்னைய ஒளியிழந்து யாவராலும் இகழப்படுவர்.

இஃது ஆன்ஹோர் கண்ட அசையாத உண்மை. அவ்வாறிருக்க ஈதியசின் பெருமனையில் இத்தகைய குடி வெறியின் குரங்காட்டம் நடந்ததைக் கண்ட தீசியசு சினத்தால் தன் புருவத்தை நெரித்தான்.

அவ்வெறியர் யாவரும் பல்லாசின் மக்கள் என்பதைத் தீசியசு அறிந்து கொண்டான். அவர்களின் வெறியாட்டமும் நகைக்கூட்டமும் அப் பெருமனையையே அதிரச் செய்தன.

'குடிகளுக்கு உயிராக விளங்குபவன் அரசன். அவ்வரசனின் இல்லத்தில் இத்தகைய ஆரவாரம் நடக்குமாயின் அவனது நாட்டிலே கண்டவிடமெல்லாம் கள்வர் திரிவதில் வியப்பு என்ன இருக்கிறது?' என்று தீசியசு தனக்குள் வினவினான்.

பல்லாசின் மக்களாகிய பல்லாந்தையர்கள் தீசியசைப் பார்த்தனர். "விருந்தினனாய் வந்த நெடியோய், நினக்கு வேண்டுவது யாது? விளம்புக," என அவர்கள் வெறியோடு வினவினர்.

"ஆம், விருந்துண்ணத்தான் வந்திருக்கிறேன்," என்றான் தீசியசு.

"அவ்வாறாயின் வருக; எம்முடன் அமர்க. நீ ஆக்கமும் ஊக்கமும் உடைய போர் மறவனாகக் காணப்படுகின்றாய். உன்னைப்போன்ற ஒருவனை விருந்தினனாக ஏற்றுக் கொள்வதில் நாங்கள் பெருமிதம் அடைகிறோம்," என்று அக்குழுவினர் அவனை வரவேற்றனர்.

"விருந்துண்ண விரும்புவது உண்மைதான். ஆயினும், உங்களோடு அன்று. இந்நாட்டிற்கு

வேந்தரும், இவ்வரண்மனைக்கு உரியவருமாகிய ஈதியசுடன்தான் விருந்துண்ண விழைகின்றேன்,'' என்றான் தீசியசு.

இதனைச் செவிமடுத்த பல்லாந்தையர் எள்ளல் குறிப்போடு உறுமினர்; அவர்களில் சிலர் சிரித்தனர். பலர், ''நாங்கள் யாவருமே இவ்வரண்மனையின் தலைவர்கள்தாம். இதனை நீ அறியாய் போலும்,'' என்று கத்தினர்.

''அவ்வாறாயின் நானும் உங்களையொத்த உரிமையுடையவன் தான்,'' என்று பெருமிதத்தோடு கூறித் தீசியசு அவர்களுக்கிடையே எடுப்பாக நடந்து சென்று ஈசியசு எங்கிருக்கின்றான் என்று ஆராய்ந்தான். பல்லாந்தையர் அவனை ஏறெடுத்துப் பார்த்தனர். பிறகு அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். ஒவ்வொருவனும் தனக்கு அடுத்தவனிடத்தில், ''இவன் துடுக்கும் மிடுக்கும் உடையவனாய்த் தோன்றுகின்றான். இவன் கொட்டத்தை அடக்கிக் கடைவாயிலுக்கு வெளியே கழுத்தைப் பிடித்துத் தள்ள வேண்டும்,'' என்று மெலிந்த குரலில் கூறினர்.

அதனைக்கேட்ட ஒவ்வொருவனும், ''அவனது தோள்களைப்பார். மலைகளைப்போலத் தோன்றுகின்றன. அவனது மார்பின் அகலம் நமது நெஞ்சத்தில் துணுக்கத்தை உண்டாக்குகிறது. நீ வேண்டுமானால் எழுந்து சென்று அவனை வெளியே தள்ளு,'' என்று மற்றவனிடம் கூறினான்.

ஆனால் யாரும் தன் உயிரை வெறுத்து அதனைச் செய்யத் துணியவில்லை. அவரவர் இடத்தில் அக் கோழைகள் அமைதியாக அமர்ந்திருந்தனர்.

பின்னர், தீசியசு ஆங்கு நின்ற ஓர் ஏவலனை அழைத்து, "நீ விரைவில் போய் உங்கள் தலைவ ராகிய ஈதியசிடம் 'திரோசீனில் இருந்து தீசியசு என்பான் தங்களிடம் விருந்தினனாக வந்துள்ளான்' என்பதை அறிவித்து வருக," என்றான்.

அந்த ஏவலன் விரைந்து சென்று வேந்தனைக் கண்டான். அவன் ஓர் அறையில் மேதியாள் என்னும் மங்கையோடு அமர்ந்திருந்தான். அவள் அவ் வேந்தனைத் தன் மந்திரத்தால் பிணித்து வைத் திருந்தாள். அவன் அவளுக்குக் கட்டுப்பட்டு நடந் தான். திரோசீன் என்ற சொல் அவன் காதுகளில் விழுந்த உடன் அவனது முகம் வெளுத்துப் பின் சிவந்தது. தன்னையறியாமலே அவன் தன் இருக் கையினின்றும் எழுந்தான். அவன் உள்ளத்திலே தோன்றிய துணுக்கம் அவனது உடலையும் நடுக் கிற்று. அவனது மாறுபட்ட செயல்களை மேதியாள் கருநாகம் போலக் கவனித்தாள்.

"திரோசீனுக்கும் உமக்கும் என்ன தொடர்பு?" என்று அவள் அவனை வினவினாள்.

வேந்தன், "தீசியசு என்பவனை நீ அறியமாட் டாயா? அவன் நம் நாட்டிலுள்ள தீயவரை வென்று நல்லவரை வாழ்விக்கின்றான் என்ற நற் செய்தியை நாம் பலமுறை கேட்டிருக்கின்றோம். ஆயினும், அவன் திரோசீனில் இருந்து வருகின் றான் என்ற செய்தி நமக்குப் புதுமையாக உள்ளது.

எனினும், அத்தகைய ஆண்மை மிக்க இளைஞனை எதிர்கொண்டு அழைப்பது எனது இன்றியமையாத கடமை,'' என்று கூறித் தீசியசு இருந்த பேரறைக்குச் சென்றான்.

அவனைக் கண்டவுடன் தீசியசின் உள்ளத்தில் தன் தந்தையை மார்புறக் கட்டித் தழுவவேண்டுமென்ற எண்ணம் தோன்றிற்று. ஆயினும், 'உணர்ச்சியை ஒடுக்கிச் சூழ்நிலைக்கேற்ப அறிவோடு நடந்து கொள்ளவேண்டும்' என்று அவன் எண்ணினான்.

உடனே தீசியசு வேந்தனை முறைப்படி வணங்கி, "மன்னர் மன்ன, இம் மாநிலத்தில் மக்களுக்கு இன்னல் விளைத்து மடங்காது திரிந்த மாக்கள் பலரையும் நான் என் தோள்வலியால் வெற்றி கொண்டு நல்லவர்களுக்கு வாழ்வளித்துள்ளேன். பலரும் செய்யா தொழிய நான் இதனை முன் வந்து செய்ததன்பொருட்டு வேந்தரிடம் பரிசு பெறவே வந்தேன்,'' என்றான் தீசியசு.

முதுமையால் தளர்ச்சியுற்றிருந்த ஈதியசு தீசியசை நன்கு நோக்கினான். அவனிடத்தில் தன்னை அறியாமலே உண்டாகும் உறவினை எண்ணித் தனக்குள் வியந்தான். அவன் தீசியசின்பால் கொண்ட அன்பு ஒவ்வொரு நொடியும் கிளர்ந்து பொங்கிற்று. யாருக்குத்தான் அத்தகைய பேராண்மை மிக்க மகனிடத்து அன்பு ஆறாகப் பெருகி ஓடாது? ஆயினும், வேந்தன் ஒன்றும் கூறாது பெருமூச்செறிந்தான். பின்னர், தன்னை ஒருவாறு தேற்றிக் கொண்டு, "ஏறு போல் இளை

யோய். உன் தகுதிக்கேற்ற பரிசினைத் தருவதற்கு என்னிடத்தில் யாது உள்ளது? நீ மக்களுள் ஒருவன் அல்லன்; தேவருள் ஒருவன். ஆயினும், தான் விரும்பியதை ஆராயாது செய்யும் கயவனும் அல்லன். எண்ணித் துணியும் ஏற்றமுடையவன்,'' என்று பலபடப் புகழ்ந்தான்.

''வேந்தருள் வேந்தே, நான் தங்களிடம் விரும்புவதெல்லாம் உங்களோடு இருந்து உண்டு மகிழ்வதைத்தான்,'' என்று தன் விருப்பத்தைத் தெரிவித்தான் தீசியசு.

''ஆம், அது எளிதில் நிகழக்கூடியதுதான். ஆயினும், இப்பெருமனையின் நிகழ்ச்சிகள் என் ஆணையின் பேரில் நடக்குமாயின் நீ கூறுவதும் நடக்கும்,'' என்று தன் ஆற்ருமையைத் தீசியசிடம் ஒருவாறு புலப்படுத்தினன்.

பின்னர் ஈதியசு அவ்விடத்திலேயே தீசியசிற்கு விருந்தளிக்க ஏற்பாடுசெய்தான். தீசியசு அங்கு மகிழ்ச்சியோடு அமர்ந்து உண்ணத் தொடங்கினன். ஆயினும் தன் வெண்கலத் தடியை மறவாது தன் அருகிலேயே வைத்துக்கொண்டான். 'உண்டவன் உரம் செய்வான்' என்பது பழமொழி. அதற்கேற்பத் தீசியசு உண்ட அளவினைக்கண்ட பல்லாந்தையர் வியப்பும் அச்சமும் கொண்டனர்.

ஆனல், மேதியாள் மட்டும் தன் கார் நிறக் கண்களால் அவனைக் கவனித்த வண்ணமாகவே இருந்தாள். அவன் திரோசீனிலிருந்து வந்தவன் என்ற செய்தி வேந்தனின் உள்ளத்தில் விளைவித்த வேற்

றுமைகளை அவள் எண்ணிப்பார்த்தாள். தீசியசை அவன் வரவேற்ற முறையும் அவளுக்கு ஐயம் கலந்த அச்சத்தை உண்டாக்கிற்று. தீசியசு ஒரு சிங்கத்தை ஒத்தவனாகவும் அவனுக்கு முன் பல்லாந்தையர் அனைவரும் ஒரு நாய்க் கூட்டம் போலும் அவளுக்குத் தெரிந்தது. 'இனி இந்நாட்டிற்கும் இவ்வரண்மனைக்கும் இவனே தலைவனாவான். ஈதியசின் உள்ளத்தில் இப்பொழுதே இவன் இடம் பெற்று விட்டான். பல்லாந்தையரோ பரக்கப்பரக்க விழிக்கின்றனர். இனி அரசனுடைய இல்லத்தில் இவர்களுக்கு இடமேது. என்னுடைய நிலைதான் என்ன?' என்று தனக்குள் ஏங்கினாள்

அவள் உடனே அவ்விடத்தை விட்டு நீங்கித் தன்னுடைய அறைக்குள் சென்றாள். தீசியசு மேலும் உண்டு கொண்டிருந்தான் அங்கிருந்த ஏவலர் யாவரும் தமக்குள் மெல்லெனப் பேசிக் கொண்டனர். ''இளையோனாகிய இந்நம்பியே அரக்கர் பலரை அழித்தவன் போலும். அவனது தோற்றப் பொலிவும், தோள் வலிமையும் இருந்தவாறு என்னே! இவனன்றோ எம் அரசனுக்கு மகனாக இருத்தல் வேண்டும்,'' என்று அவனைப் பாராட்டினர்.

இதற்கிடையில் மேதியாள் வண்ணப் பட்டாடை உடுத்திப் பன்னிறக் கற்கள் அழுத்திய பொற்கலன்கள் பூட்டி அங்கு மீண்டும் புதுமையோடு காட்சியளித்தாள். தன் வலக்கையில் ஏந்தி வந்த பொற்கலத்தைத் தீசியசிடம் நீட்டினாள். பின்னர் அவள் இனிமையும் மென்மையும் இடை

மிடைந்த கவர்ச்சி மிக்க குரலிலே, "கட்டழகு மிக்க கட்டிளம் காளையே, தீயவற்றை வென்று நல்லவற்றைக் காக்கும் காவலனே, நீ நீடு வாழ்க. நின் மறமாண்பைக் கேள்வியுற்ற நான் மகிழ்ச்சியுற்றேன். இதோ என் பரிசு; ஏற்றுக்கொள். இதனுள் இருக்கும் பழச்சாற்றை நீ பருகுவாயாயின் அதன் இனிமையால் உன் உள்ளம் குளிரும். பன்னுள் நடந்து வந்த களைப்பு நீங்கி உன் உடம்பிலே புதியதொரு தெம்பு பிறக்கும். மற்றும், இது தேவர்கள் பருகும் அமிழ்தமாகலின் அவர்களைப் போல நீ இறவாது வாழ்வாய்," என்று அவ்வேந்திழையாள் கூறினள்.

அவள் அவ்வாறு பேசிக்கொண்டே அப்பொற் கலத்தில் மேலும் அப்பழச்சாற்றை ஊற்றினள். அப்பொழுது அதன் மணம் அவ்வறை முழுவதும் கமழ்ந்தது.

தீசியசு அவளுடைய கண்களைக் கூர்ந்து நோக்கினன். அவள் துணுக்குற்று நடுங்கினள். தீசியசு தன் இருக்கையினின்றும் எழுந்து, "இப்பழச்சாறு குணமும் மணமும் நிறைந்தது. அதை ஏந்தி நிற்பவர் ஒரு சிறிது அவ்வள்ளத்தினின்றும் அவர்களே பருகி, எஞ்சியதை எனக்கு ஈவார்களாயின் அதுவே சிறந்த முறையாகும்," என்று ஆரவாரமின்றிக் கூறினன்.

மேதியாளின் முகம் அச்சத்தால் வெளிறிற்று. அவளது நா குழறிற்று. "ஆண்மை மிக்க அழகனே, மன்னித்துக்கொள். எனக்கு உடல் நலமில்லை. ஆகவே நான் அதைப் பருக இயலாது," என்ருள்.

தீசியசு மீண்டும் அவளது கண்களைக் கூர்ந்து நோக்கி, "நீ இப்பொழுது அதைக் குடிக்கிறாயா, இந்த வெண்கலத் தடியால் உன்னை அடித்து நொறுக்கவா?" என்று ஆரவாரித்தெழுந்து தன் கதையைத் தூக்கினான். விருந்தினர் யாவரும் விளர்த்து நோக்கினர்.

மேதியாள் அஞ்சிக் கூக்குரலிட்டுத் தன் கையில் ஏந்தியிருந்த பொற்கலத்தைத் தரைமீது வீசி எறிந்தாள். அதனுள்ளிருந்த பழச்சாறு அவ் வறையின் பளிங்குத் தளத்தில் கொட்டிச் சிதறிற்று. அச்சாற்றினுள் கலக்கப்பட்டிருந்த நஞ்சு அப் பளிங்குக் கற்களைப் பொசுக்கிப் பொரிந்து கொப் பளித்துச் சுஃறென்னு ஓசையுடன் புகையாகக் கிளம்பிற்று.

மேதியாள் காலம் தாழ்த்தாமல் தன் யாளி முகத் தேரின்மீது ஏறிக் காற்றினும் கடிதாகப் பறந்து போய்விட்டாள். அதன் பின்னர் அவள் என்னவாயினள் என்பதை யாரும் அறியார்.

அதனையறிந்த ஈதியசு தீசியசை, "யாது செய்தனை?" என்று வெகுண்டு வினவினான். தீசியசு யாதும் கூறாது பளிங்குத் தளத்தை ஈதியசிடம் சுட்டிக்காட்டினான். பின்னர், தீசியசு வேந்தனை நோக்கி, "நான் இந்த நாட்டினை மாய வலையினின்றும் பிழைக்கச் செய்தேன். இனி மற்றொரு பிடியினின்றும் அதனை மீட்கவிருக் கிறேன்," என்றான்.

பின்னர் அவன் ஈதியசை நெருங்கிச் சென்று தன் மார்போடு அணைத்து வைத்திருந்த பொற்

பாதுகைகளையும், வெண்கல வாளையும் வேந்தனின் திருமுன்னர்ப் படைத்துத் தன் தாய் தனக்குச் சொல்லியிருந்த சொற்களைச் சொற்ருன்.

அதனைக் கேட்ட ஈதியசு அதிர்ச்சியுற்று ஓர் அடி பின்னெடுத்து வைத்தான். அவனுடைய கண்கள் தீசியசை குறுகுறுவென்று நெடுநேரம் பார்த்தன. அவனுடைய கண்கள் மயங்கிச் சுழன் றன. மறு நொடியில் அவன் தீசியசின் கழுத்தைக் கட்டிக் கொண்டு ஒரு குழந்தையைப் போல் கதறினன். தீசியசும் தன் தந்தையைக் கட்டிக் கொண்டு தேம்பித்தேம்பி அழுதான். இருவரும் தத்தமக்கு வலிமையுள்ளவரை அழுது தீர்த்தனர்.

பிறகு ஈதியசு அங்கிருந்த யாவரையும் நோக்கி, ''தம்மினும் தம் மக்கள் அறிவுடையவராய் இருத் தல் இம்மாநில மக்கள் யாவர்க்கும் பெருமை தருவ தாகும். அத்தகைய பெருமையை எனக்குத் தந் தவன் இவன் ஒருவனேயாவன் இவன் அறி வினல் யாவர்க்கும் சிறந்தவன் மட்டுமல்லன்; வலி மையினலும் யாவர்க்கும் சிறந்தவன்,'' என்ருன்.

பல்லாந்தையர்களின் வெறி இதைச் செவி மடுத்தபின் அழுக்காறென்னும் பெருவெறியாய் வளர்ந்தது. இதுநாள்வரை பல்லாசின் வாயி லாகத் தாம் அனைவரும் ஈதியசின் புதல்வரென்னும் உரிமை கொண்டாடி நாட்டின் செல்வத்தையும் அரசனின் நெறி முறையையும் பாழ்படுத்தி வந் தனர். இன்று தம்மினும் உரிமையும் வலிமையும் உடைய ஒருவனை அரசன் தனக்கு மகனென ஏற்றுக்கொண்டான். இதனை அவர்களால் எவ்

வாறு தாங்கிக் கொள்ளக் கூடும்? அவர்களுள் ஒருவன், "இது என்ன அநீதி? குடிப்பிறப்பறியாத ஒருவன் இன்று புதிதாக வந்து அரசுக்கு உரிமை கொண்டாடுகின்ருன். இவனுக்காக நாம் விட்டுக் கொடுப்பதா?" என்று கத்தினன். "அவன் ஒருவன் என்ருல்; நாம் பலர் இருக்கின்ருேம்," என்ருன் மற்ருெருவன். பின்னர் யாவரும் தத்தமக்குத் தோன்றியவாறெல்லாம் கத்தினர். அவர்களது கள் வெறியும், அழுக்காற்று வெறியும் சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லியாக மாறிப் பெரும் புயலெனச் சுழன்று அடித்தன. ஒவ்வொருவரும் தத்தம் கைக்குக் கிடைத்த வாளையும் வேலையும் கையில் ஏந்தித் தீசியசின் மேல் பாய்ந்தனர். எலிக் கூட்டத்தின் மீது அரவம் சீறித் தாவுவது போல் தீசியசு பல்லாந்தையரின்மீது பாய்ந்தான்.

"நீங்களும் என் தந்தைக்கு மக்களெனின் உடன் பிறந்தவர்தாம். எனவே அமைதியாகச் செல்லுங்கள். இல்லையாயின் உங்கள் உயிரைப் பணயமாக வைத்து என்னுடன் பொருதுங்கள்," என்ருன்.

'கேடு வரும் பின்னே; மதிகெட்டு வரும் முன்னே' என்றவாறு அவர்களைக் கேடு எதிர் நோக்கிக் கொண்டிருந்தது. அவர்கள் அவனது அறிவுரையைக் கேட்டு நடப்பார்களா? அதனைப் பொருட்படுத்தாமல் அவர்கள் அவனைத் தாக்க முயன்றனர். ஆயினும், அவன் சிங்கம் போல் வீர முழக்கம் செய்துகொண்டு தன் கதையை உயர்த்தினன். அவர்களால் அவனை நெருங்கக்கூட

வில்லை. புதரில் கிடந்த சிங்கத்தை எழுப்பிய நாய்கள் போல் அவர்கள் எட்டி நின்று குரைத்தனர்.

அவர்களுள் ஒருவன் தன் ஈட்டியைத் தீசியசை நோக்கி எறிந்தான். அது தீசியசின் தலையை ஒட்டிச் சென்றது. அதற்கு மேல் தீசியசால் பொறுத்துக் கொண்டிருக்கக்கூடவில்லை. தீசியசு அவர்களை மேற்சென்று தாக்கினன். உண்மையாகவே போர் தொடங்கிவிட்டது. இருபது பேர் சேர்ந்து அவன் ஒருவனைத் தாக்கினர். அவன் அவர்கள் யாவரையும் பின்னி எடுத்துவிட்டான். எஞ்சியவர் யாவரும் தம் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு ஏதென்சு நகரத் தெருக்களின் வழியாகத் தலை தெறிக்க ஓடினர். அவர்கள் தீசியசிடமிருந்து தப்பினலும் மக்களிடம் இருந்து தப்பமுடியவில்லை. பொதுமக்கள் அக்கொல் குறும்பரைத் தெருத் தெருவாகத் துரத்தி அந்நகரத்திற்கு அப்பால் ஓட்டிவிட்டனர். தீசியசு மட்டும் தனியாகத் தான் அண்மையிலே கண்டுபிடித்த தந்தையுடன் அரண்மனையிலே இருந்தான்.

அன்று மாலையில் கதிரவன் கல்சேர்வதற்கு முன் நகர மாந்தர் ஒளிந்திருந்த குறும்பர் பலரைத் தளைப்படுத்திக் கொணர்ந்தனர்.

## கட்டுரைக் குறிப்பு

I கொல்குறும்பர் கூட்டத்தின் அழிவு.

1. முன்னுரை. 2. பித்தாலிது மறவரின் மாண்பு. 3. நல்வரவேற்பு. 4. கொல்குறும்பர் கூட்டம். 5. தந்தையும் தனயனும். 6. மேதியாளின் கயமை. 7. பல்லாந்தையர்களின் அழிவு. 8. முடிவுரை.

——

## 7. தம்மையே தம்மவர்க்கு நல்கினன்

பனிக்காலமுழுவதும் தீசியசு தன் தந்தையுடனே மகிழ்ச்சியோடு வாழ்ந்தான். இளவேனிற் காலம் நெருங்கிற்று. அது யாவரும் மகிழ்வோடு வரவேற்கும் காலம். ஆயினும் ஏதென்சு நகர மாந்தர் யாவரும் வருத்தத்துடன் காணப்பட்டனர். அவர்களிடையே ஆடல் பாடலோ பிற ஆரவாரங் களோ காணப்படவில்லை. ஏதென்சு நகரம் முழுவதிலும் அமைதி நிலவியது. தீசியசு அதனைக் கண்டான்; ஆனல் அவனுக்கு அதன் அடிப்படை விளங்கவில்லை. அவர்களை வினவினன். ஆயினும் ஒருவரும் அவனிடம் வாய் திறக்கவில்லை.

பிறகு அவன் தன் தந்தையிடம் சென்றான். குடிகள் வாட்டமுற்றிருப்பது யாது பற்றி என வினவினன். ஈதியசு விடைகூற ஆற்றாதவனாய், முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு அழுதான்.

“மகனே, என்னிடம் ஒன்றும் கேளாதே. தீங்கு வருவதற்குமுன் அதைப்பற்றி நான் கூற விரும்பவில்லை. அது வந்தபின் அதனை ஏற்போம்,” என்றான் ஈதியசு.

இளவேனிற்காலம் தொடங்கியதும், நகர மன்றத்தின் முன்பாக வேற்றுநாட்டுத் தூதுவன் ஒருவன் தோன்றி, “ஏதென்சு மக்களே, அரசே, நீங்கள் ஆண்டு தோறும் செலுத்தவேண்டிய கப்பம் எங்கே? விரைவில் கொணர்க,” என ஆணையிட்

டான். நகரமே துயரத்தில் ஆழ்ந்தது. தீசியசு மட்டும் அத்தூதுவனிடம் சென்முன்.

"நீ யாவன்? நாய்போலும் முகத்தையுடைய நீ கப்பம் கேட்கிருயே, உனக்கு எத்துணைத் துணிவு. நீ மட்டும் தூதுவனுடைய கொடியுடன் வந்திருக்கவில்லையெனில் என் வெண்கலத் தடியினுல் உன் மூளையைச் சிதறும்படியாக அடித்திருப் பேன்," என்முன் தீசியசு.

தூதுவன் யாண்டிலே முதியவன்; எனவே ஆத்திரம் கொள்ளாமல் உறுதியோடு விடை பகர்ந் தான்: "ஏற்ற மிக்க இளையோய், நான் நாய் முகத் தானுமல்லன்; நாணமற்றவனும் அல்லன். நான் என்னுடைய தலைவனது ஆணையை நிறைவேற்று கின்றேன். நூறு நகரங்களைத் தன்பாற்கொண்ட கிரீட் தீவின் வேந்தர் யாவருள்ளும் நுண்மாண் நுழை புலமுடையவனுகிய எம் வேந்தன் மீனுசு என் பவனை நீ அறியாய்போலும். நீ இந்நாட்டிற்குப் புதியவனுயின் அறிந்துகொள். நான் எங்கள் உரிமையை வலியுறுத்தவே ஈண்டு வந்துள்ளேன்.

"ஒருகால் எம் வேந்தர்பெருமான் மீனுசு இந் நாட்டு மன்னன் ஈதியசிடம் கடும் சினம் கொண் டான். என்னெனில் எம் வேந்தனின் மகன் ஆந்தி ரோதியசு அத்தீனிய விளையாட்டுக்களில் பங்குபெற இங்கு வந்திருந்தான். அம்மட்டோ? அவன் விளை யாட்டில் கிரேக்க நாட்டு வீரர் யாவரையும் வென் முன். எனவே மக்கள் யாவரும் அவனை நன்கு மதித்துப் பாராட்டினர். அதனைக் கண்ட ஈதியசு அழுக்காறு கொண்டான். அவனும் பல்லாந்தை

யருடன் கூடித் தன் ஆட்சியைக் கைப்பற்றி விடு வானே என ஈதியசு அஞ்சினன். எனவே அவன் எம்நாட்டு இளவரசனை வஞ்சனையால் கொன்ருன். இச்செய்தியானது எம் வேந்தனின் செவிகளில் பழுக்கக் காய்ச்சிய ஈட்டி போல் பாய்ந்தது. அவன் ஆரவாரித்துப் போருக்கெழுந்தான். கடல் பொங்கி எழுவது போல் மீனுசின் படைகள் திரண்டு எழுந் தன. அவன் தானே கப்பற் படையொடு வந்து இந்நாடு முழுவதையும் வென்ருன். இதற்குக் கீழ்த் திசையிலுள்ள மெகாராவையும் வென்ருன். போரில் ஆற்ருது தோற்ற ஈதியசு ஆண்டு தோறும் கப்பம் கட்டுவதாக ஒப்புக்கொண்டான்; உறுதி மொழியும் தந்தான்.

"சிலர் கூறுகின்றனர் தீப்சிற்குச் செல்லும் சாலையிலுள்ள ஓயினே என்னுமிடத்தில் ஆந்திரோ தியசு வழி மறித்துக் கொல்லப்பட்டான் என்று; மற்றும் சிலர், ஈதியசு அவனை மராத்தான்எருதிடம் அனுப்பிக் கொல்வித்தான் என்கின்றனர். அவன் இளையர் பலரைப் போட்டியில் வென்றதால் பொரு மையால் அவர்களே அவனைக் கொன்றிருக்கக் கூடும் என்று ஈதியசு கூறுகிருன். எனவே மீனுசு நேரில் வந்து தன் வஞ்சத்தைத் தீர்த்துக் கொண் டான். மற்றும், தான் கேட்கும் கப்பத்தை ஈதியசு கட்ட ஒருப்படாதவரை மீனுசு ஏதென்சை விடுத் துச் செல்ல விரும்பவில்லை. அவன் பெற விரும்பிய கப்பம் யாது என நீ அறியவிரும்பலாம்; கூறுவேன் கேள்: ஏழு இளைஞரையும், ஏழு மங்கையரையும் ஒவ்வோராண்டும் என்னுடைய கரிய பாய்கள்

கட்டப்பட்ட கலத்திலே என்னுடன் கிரீட்டிற்கு அனுப்பி வைத்தல் வேண்டும்,'' என்று தூதுவன் விரித்துக் கூறினுன்.

தீசியசு தன் பற்களை நற நற வெனக்கடித் தான். "நான் என் தந்தையிடம் சென்று உண் மையை அறிந்து வருகிறேன்,'' என்று தீசியசு விரைந்தான்.

தீசியசு தன் தந்தையிடம் சென்று தூதுவன் கூற்றைப் பற்றி வினவினுன். ஈதியசு தன் முகத் தைத் திருப்பிய வண்ணமாக, "இந்நகரத்தில் நீதிக்கும் மாருகக் குருதி கொட்டப்பட்டது. அப் பழியானது குருதியினுலேயே தீர்க்கப்படுகிறது. நீ உன் வினுக்களால் என் இதயத்தைப் பிளக்காதே. அமைதியாக அதனை ஏற்றுக்கொள்வதே மேல்,'' என்ருன் ஈதியசு.

தீசியசு தனக்குள் குமுறினுன். "நானே இவ் விளைஞருடனும் மங்கையருடனும் செல்வேன். அவ் வாணவமிக்க மீனுசை அவனது அரியாசனத்தி லேயே அடித்து நொறுக்குவேன்,'' என்று அவன் சூளுரைத்தான்.

ஈதியசு, "மகனே! நீயோ என் குலவிளக்காகத் தோன்றினுய். நான் இறந்து பட்டபின் நீயேனும் என் குடிகளைக் காத்து வருவாய் என்று எண்ணி னேன். நீ போகக்கூடாது. அவ்விளைஞரோடும் மங்கையரோடும் நீ அக்கொடிய சாவினை ஏற்றுக் கொள்ளக் கூடாது. மீனுசு அவர்களை ஒரு பின்னல் நெறியில் தள்ளுகின்ருன். தயாதாலோசு

கற் பாறைகளுக்கிடையே அந்நெறியை அவனுக்காகக் குடைவித்தான். அவன் இந்நாட்டினின்றும் வரம்பு மீறி அங்கு ஓடியவன். இப்பின்னல் நெறியில் நுழைந்தவர்கள் யாரும் தப்பமுடியாது. அது இறுதியாக அவர்களை மினேத்தார் என்னும் விலங்கு மகனிடம் கொண்டு சேர்க்கும். அவ் விலங்கு மகன் அவர்களைத் தன் கொம்புகளால் குத்திக் கொன்று அவர்களது புலாலைத் தின்று தன் கொடிய பசியைத் தீர்த்துக் கொள்வான். அவனிடம் சென்றவர்கள் இதுவரை யாரும் மீண்டதில்லை,'' என்று புலம்பினான்.

தீசியசின் முகம் சினத்தால் சிவந்தது. மான உணர்ச்சியால் அவனது நெஞ்சு படபடவென்று அடித்தது. போர்க் களத்தில் மாற்றாரது வேலை மார்பிலே ஏற்று உயிர்நீத்த மறவனுக்கு அடுக்கப்பட்ட கல் போல அவன் சிறிது நேரம் அசையாது நின்றான். பின்னர் அவனுடைய மான உணர்ச்சிகள் மறமாண்புடன் வெளிப்பட்டன. ''ஆகலின் நானே அவர்களுடன் போவேன். அந்தக் கொடிய விலங்கைக் கொன்று தீர்ப்பேன். தீயவர் யாவரையும் நான் தொலைத்துக் கட்டவில்லையா? கொரிநீட்டசு, சினிசு, கற்குவான், பாயியா ஆகிய யாவரும் என் முன் என்னவாயினர்? பல்லாசின் மக்கள் ஐம்பதின்மரும் இன்று எங்கே? அவர்கள் சென்ற வழியிலேயே மினேத்தாரும் செல்வது ஒருதலை. மீனசும் என்னை எதிர்க்கத் துணிவானாயின், அவனுக்கும் அதே போக்குத்தான்,'' என்று வீர முழக்கம் செய்தான் தீசியசு.

“மகனே, நீ மினேத்தாரை எவ்வாறு கொல்வாய்? நீ உன் கவசத்தையும், வெண்கலத்தடியையும் இங்கு விடுத்தன்றோ செல்லுதல் வேண்டும். யாதொரு தற்காப்பும் ஆடையுமின்றியன்றோ உன்னை அப்பின்னல் நெறியினுள் தள்ளுவர்,” என்று ஓலமிட்டான் ஈதியசு.

“என் தந்தையே வருந்தாதீர்கள். அந்தப் பின்னல் நெறியில் கற்களும் அகப்படமாட்டாவா? அவை தாம் கிடைக்கப்படமாட்டா வெனின் என் கைகளும் பற்களும் இல்லையா? மக்கள் யாவரும் கற்குவானின் பெயரைக் கேட்டவுடன் குலை நடுங்கினர். அவனைக் கொல்வதற்கு நான் என் கதையையா எடுத்தேன்?” என்று தந்தையை ஆற்றுவித்தான்.

ஈதியசு எவ்வளவோ சொல்லியும் தீசியசு அதற்குச் செவிசாய்ப்பதாக இல்லை. இறுதியாக வேறு வழியின்றி ஈதியசு தன் மகனைப் போகவிடுத்தான்.

ஆயினும் அவன் தன் மகனிடம் ஒன்றுமட்டும் கேட்டுக் கொண்டான். “மகனே, நீ மீள்வாயென்று நான் நம்பவில்லை. ஒருகால் நீ வெற்றியுடன் மீள்வாயாயின் நீ உன் கப்பலிலுள்ள கரிய பாயை நீக்கிவிட்டு வெள்ளிய பாயை பறக்கவிட்டுக் கொண்டுவா. என்னெனில் நான் கடலோரமாகவுள்ள மலை முகட்டில் ஏறி உன் வருகையை எதிர் நோக்கிக்கொண்டே இருப்பேன். உறுதியாகச் சொல்,” என்ருன்.

தீசியசு அவ்வாறே உறுதிமொழி கூறிப்புறப் பட்டான். காலம் தாழ்த்தாது அவன் மாற்ருனது

தூதுவன் நின்று கொண்டிருந்த மன்றத்திற்கே சென்ருன். அங்கு, கிரீட்டிற்குச் செல்லவேண்டிய தீயூழ் படைத்த இளைஞரைக் குடவோலை வாயிலாகத் தேர்ந்து கொண்டிருந்தனர். அச்சாவோலை ஒருவர் பின் ஒருவராக அறிவிக்கப்பட்டது. உற்ருரும் உறவினரும் அங்குக் கூக்குரலிட்டுக் கொண்டிருந்தனர்.

தீசியசு அவர்களிடையே சென்று, "தேர்ந்தெடுக்கத் தேவையில்லாத இளைஞன் ஒருவன் இதோ வருகிருன்," என்று தம்மையே தம்மவர்க்காக நல்க முன்வந்தான். தூதுவன் வியப்புற்றவனுகத் தீசியசை நோக்கி, "நீ எங்கே புறப்படுகிருய் என்பது உனக்குத் தெரியுமா?" என்று வினவினுன்.

"ஆம், எனக்கு அது நன்கு தெரியும். கரிய பாய் விரிக்கப்பெற்ற கப்பலுக்குத்தானே? வாரும் போகலாம்," என்ருன் தீசியசு.

ஆகவே அவர்கள் கரிய பாய்க்கலனுக்குச் சென்றனர். மங்கையர் எழுவரும், இளைஞர் எழுவரும் பின் வரத் தீசியசு முன் நடந்தான். மக்கள் யாவரும் பின் தொடர்ந்தனர். அப்பொழுது தீசியசு தன் உடன்போக்காளரிடம் மெல்லிய குரலில், "நண்பரீர்! அஞ்சற்க. அம் மினேத்தார் இறவாத வரம் பெற்றதன்று. பெரிபீட்டசு, சினிசு, சுகிரோன் ஆகிய பலரும் என் கை வலியால் மாண்டு மண்ணெடு மண்ணுய் மறைந்தனரல்லவா?" என்று கூறி அவர்களைத் தேற்றினுன். ஆயினும் அவர்களைக் கலத்தினுள் ஏற்றியதும் அவர்கள் ஆற்ருது

அழுது அரற்றினர். அவர்களது கூக்குரல் சுனியம் முகடுகளிலும், ஈதியன் கடலிலும் சென்று எதிரொலித்தது. அவர்கள் சாவினை நோக்கிக் கிரீட்டிற்குச் செல்வாராயினர்.

**கட்டுரைக் குறிப்பு**

I தம்மையே தம்மவர்க்கு நல்கினான்.

1. முன்னுரை. 2. வேற்றுநாட்டுத் தூதுவன் கப்பம் கேட்டல். 3. தீசியசின் வினவும் தூதுவனின் விடையும். 4. தந்தையின் கலக்கம். 5. பின்னல் நெறி. 6. தீசியசின் எழுச்சி. 7. தம்மையே தம்மவர்க்கு நல்கினான். 8. முடிவுரை.

---

## 8. இறுதி வெற்றி

கிரீட்தீவில் இடா என்னும் சிகரத்தின் அடிவாரத்தில் நாசசு என்னும் நகரம் ஒன்றுள்ளது. அதுவே அந்நாட்டின் தலைநகரம். அந்நகரத்தின் வேந்தனான மீனசு கடவுளர்க்குத் தலைவனாகிய சீயசிடம் தண்டமும் வழக்குமாகிய அறநூல்களைப் பயின்றவன். எனவே, அவனை அரசர்கள் யாவரிலும் பேரறிஞன் என்று உலகம் போற்றிற்று. அவன் ஈதியத் தீவுகள் யாவையும் வென்றான். அவன் எண்ணிறந்த கலன்களைக்கொண்ட பெருங் கடற் படையை உடையவனாக இருந்தான். அவனுடைய அரண்மனை ஒரு பளிங்குக் குன்றம்போல் பேரழகுடன் காட்சி அளித்தது. அவனுடைய அவைக்களம் பல தூண்கள் பொருத்தப் பெற்றுப் பெருமிதத்தோடு விளங்கிற்று. அவற்றின் நடுவே செம்பொன் தகடுகளால் அமைக்கப்பெற்ற அரியாச

னத்தின் மீது அவன் அமர்ந்திருந்தான். அவனைச் சூழவும் பேசும் சிற்பங்கள் அமைக்கப்பட்டிருந்தன.

தீசியசு பிற இளைஞருடன் கொண்டுவந்து மீனுசின் முன்பாக நிறுத்தப் பட்டான். மீனுசு அவர்கள் யாவரையும் சிறையில் தள்ளிப் பின்னர் ஒவ்வொருவரையும் தனித்தனியாக மினேத்தாருக்கு இரையாகும்படிக் கூறினன்.

தீசியசு மீனுசை நோக்கி, "நன்று, நன்று. இது ஒரு நல்ல வாய்ப்பு. முதன் முதலாக என்னையே மினேத்தாரிடம் அனுப்புக. என்னெனில், நான் என் விருப்பத்தின் பேரிலேயே இங்கு வந்தேன். என்னுடைய கருத்து நிறைவேற வழிசெய்க," என்ருன்.

மீனுசு இதனைக் கேட்டவுடன் கண்களை உருட்டி விழித்துப் புருவத்தை நெறித்தான். பின்னர், "நீ அவனைப் பார்க்கலாம்; இக்கிறுக்கனை இழுத்துச் செல்லுங்கள்," என்று மீனுசு கட்டளையிட்டான்.

தீசியசு மற்றைய இளைஞருடனும், மங்கையருடனும் சிறைக்குள் தள்ளப்பட்டான்.

மீனுசின் அன்புக்குரிய ஒரே மகளான அரியதேன் என்னும் அழகிய நங்கை தற்செயலாகத் தன் வெண்கல் மாளிகையினின்றும் தீசியசைப் பார்த்து விட்டாள். அவள் அவனது ஊக்கத்தையும் பெருமிதத்தையும் கண்டு அவனிடம் அன்பும் இரக்கமும் கொண்டாள்.

அன்று இரவு அவள் சிறைக்கோட்டத்திற்குச் சென்ருள்; தீசியசைக் கண்டாள்.

“நீவிர் உம்முடைய கப்பலுக்கு ஓடித் தப்பி விடுங்கள். சிறைக்காவலர் உம்மை ஒன்றும் செய்யாதவாறு நான் ஏற்பாடுகள் செய்துள்ளேன்,” என்ருள்.

தீசியசு சிறிது நேரம் அமைதியாக நின்ருன். அவன் அரியத்தேனின் அழகைக் கண்டு வியப்பும் மருட்கையும் கொண்டான். அவன் சற்று நேரம் எண்ணிப் பார்த்து, “நான் முதலில் மினேத்தாரை நேருக்கு நேர் பார்த்து அவனைக் கொன்று தொலைக்க வேண்டும். எம்முடைய நாட்டு நம்பியரும் நங்கையரும் கொலை செய்யப்பட்டதற்குத் தக்கவாறு பழி வாங்கவேண்டும். எம்முடைய நாட்டின் ஆருத்துயரத்திற்கு ஒரு முடிவு கட்டவேண்டும்,” என்று திண்மையோடு கூறினன்.

“சரி, அப்படியே நீர் அவனைக் கொன்றுவிட்டாலும், பின்னல் நெறியினின்றும் எவ்வாறு வெளியேறுவீர்?” என்று அரியதேன் வினவினுள்.

“எனக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாது; அதன் பொருட்டு நான் கவலைப்படவுமில்லை. ஆயினும், நான் மினேத்தாரின் புலால் முழுவதையும் தின்று தீர்க்குமுன் வெளியேறும் வழியைக் கண்டு பிடிக்கவேண்டும். இல்லையெனில் அது ஒரு வியப்புக்குரிய வழியாகத்தான் இருக்கவேண்டும்,” என்ருன் தீசியசு.

அதனைக் கேட்டதும் அரியதேனுக்குத் தீசியசிடம் இருந்த அன்பு பன்மடங்கு பெருகுவதாயிற்று. அவள் அவனை நோக்கி, “தோற்ற மிக்க இளை

யோய், உண்மையிலேயே உம் அஞ்சாமை பெருமைப் படத் தக்கதுதான்; எனினும் நான் ஒரு வலிமை யற்ற பேதை என்று என் வேண்டுகோளைப் புறக் கணித்துவிடாதீர் நான் உமக்கு வாள் ஒன்று தரு கிறேன். அதன் உதவியால் நீர் மினோத்தாரைக் கொல்லலாம். மற்றும் நான் உமக்கு நூல் சுருள் ஒன்றும் தருகிறேன். அது நீர் பின்னல் நெறியி னின்று வெளியேறுவதற்கு உதவும். ஆனால் நீர் ஒரே ஓர் உறுதி கூறவேண்டும். அஃதாவது நீர் பாதுகாப்போடு தப்பிச் செல்லும்போது என்னையும் உடன் அழைத்துச் செல்லவேண்டும். இல்லையாயின் நான் கொடிய ஒறுத்தலுக்கு உள்ளாவேன்,'' என்று வேண்டினாள்.

பின்னர், தீசியசு அரியதேன் வழங்கிய வாளைத் தன் மார்பகத்தினுள் ஒளித்து வைத்துக்கொண் டான்; அவள் தந்த நூல் சுருளைத் தன் கையிலே சுற்றிக்கொண்டான். சிறைக் கோட்டத்தில் அவனை விடுத்து அவள் பிரியவேண்டிய நேரம் வந்தது. அவள் அவனை விட்டுப் பிரிவதற்கு ஆற்றாதவளாக விம்மி விம்மி அழுதாள். அவள் அங்கிருந்து சென்ற பிறகு அவன் களைப்பு மிகுதியால் அவ்விடத் திலேயே படுத்து உறங்கிவிட்டான்.

மறுநாள் பகல் முழுவதும் அவன் சிறைக் கோட்டத்திலேயே வைக்கப்பட்டிருந்தான். மாலை யில் சிறைக் காவலர் அவனை அங்கிருந்து நடத்திச் சென்று பின்னல் நெறியினுள் செல்லுமாறு தள்ளினர்.

அவன் தனது அடையாள நூலைமட்டும் கவன மாகப் பற்றிக்கொண்டே உட்சென்ருன். அந் நூலின் ஒரு நுனியை அவன் பின்னல் நெறியின் புற வாயிலில் ஒரு கல்லின்மீது கட்டிவிட்டான். அவன் உள்ளே செல்லச் செல்ல நூற்சுருளும் அவிழ்ந்து கொண்டே வந்தது. அது அவன் இறுதியாக மினேத்தாரை இரண்டு கரிய பாறைகளுக்கு நடுவே பாதாளத்தில் சென்று காணும் வரை இருந்தது.

தீசியசு மினேத்தாரைக் கண்டதும் சிறிது நேரம் வியந்து நின்ருன்; என்னெனில், அவன் அத்தகையதொரு விலங்கினைக் கண்டதே இல்லை. அவ்விலங்கினது உடல் மகனுடையதாகவும், தலை ஓர் எருதினுடையதாகவும் இருந்தன. மற்றும் அவ்வெருதுத் தலையனின் பற்கள் சிங்கத்தினுடை யவை போலக் கோரைப் பற்களாக அமைந்திருந் தன. அவன் அப்பற்களாலேயே தான் கொல்லும் மக்களது உடலைக் கீறிக் கிழித்துத் தின்பான்; அவன் தீசியசைக் கண்டதும் ஏறுபோல எக்காள மிட்டான்; பின்னர்த் தலையைக் கவிழ்ந்துகொண்டு தன் கூரிய கொம்புகளால் அவனது மார்பைப் பிளக் கும் பொருட்டுப் பாய்ந்தான்.

ஆனல் தீசியசு மிகவும் சுறுசுறுப்புடன் சற்று விலகிக்கொண்டு தன் வாளால் அவ்விலங்கு மகனது முழந்தாளைப் போழ்ந்தான். அவ்விருள் சூழ்ந்த குறுகிய நெறியில் மினேத்தார் சட்டென்று உடனே திரும்பிவிட முடியாது. அவன் சிறிது தொலைவு ஓடியே திரும்ப வேண்டியிருந்தது. அதற் குள் வல்லவர்க்கும் வல்லவனகிய தீசியசு மினேத்

தாரின் முதுகின்மேல் பாய்ந்து தன் வாளால் அவனைப் பன்முறை தாக்கினான்.

மினோத்தார் ஓடுவதற்கு ஆற்றாதவனாய் இளைத்துப்போய்ப் பனிப் பாறையின் மீது சாய்ந் தான். தீசியசு ஒரு வினாடியும் காலம் தாழ்த்தாமல் அவன்மீது பாய்ந்து அவனது கொம்பினைத் தன் இடக்கையால் பற்றிக்கொண்டு வலக்கையால் தன் முழு வலிமையுடன் மினோத்தாரின் கழுத்தில் வாளைச் செருகினான்.

பின்னர், தீசியசு உண்மையிலேயே மிகவும் களைத்துப் போய்த் தள்ளாடிக் கொண்டே அடை யாள நூலின் துணைகொண்டு பின்னல் நெறி யினின்றும் புறம் போந்தான். அதன் வாயிலிலே அரியதேன் ஆவலோடு காத்து நின்றாள்.

அவனால் உரக்கப் பேசக்கூடவில்லை. 'அது முடிந்தது' என்று அவன் மெலிந்த குரலில் அவ ளிடம் கூறிக் குருதி படிந்த கத்தியைக் காட்டினான். அவளுடைய மகிழ்ச்சிக்கும் வியப்பிற்கும் அளவே இல்லை. அவள் அவனைக் கையோடு சிறைக் கோட் டத்திற்கு அழைத்துச் சென்றாள். அங்கு அடைப் பட்டுக் கிடந்த கிரேக்க நம்பியரையும் நங்கையரை யும் விடுதலை செய்த பின், அவர்கள் யாவரும் தம்முடைய கப்பலிருந்த இடத்திற்கு ஓடினர். அங் கிருந்து அவர்கள் விரைவாகக் கலத்தைச் செலுத் திக்கொண்டு ஏதென்சு நகரத்திற்குப் புறப்பட்டனர்.

அரியதேனைத் தீசியசு மனைவியாக ஏற்றுக் கொண்டான்.



......அவனது கொம்பினைத் தன் இடக்கையால் பற்றிக் கொண்டு வலக்கையால் தன் முழு வலிமையுடன் மினைத் தாரின் கழுத்தில் வாளைச் செருகினான்.

ஆயினும், அரியதேன் தீசியசுடன் ஏதென்சு நகரத்திற்கு வந்து சேரவில்லை. இடையிலேயே ஏற்பட்ட இடையூற்ருல், அரியதேன் தீசியசிற்குக் கிடைக்கக் கூடாத அரிய தேனுக மறைந்து விட்டாள்.

அதனல் தீசியசின் உள்ளம் புழுங்கி வெதும்பிற்று. தான் தன் தந்தைக்குக் கொடுத்திருந்த உறுதிமொழியையும் அவன் மறந்துவிட்டான். அவன் தன் வெற்றியின் அறிகுறியாகத் தன் கப்பலில் கட்டடப்பட்டிருந்த கரிய பாய்களைக் களைந்தெறிந்து விட்டு, வெள்ளிய பாய்களை விரித்துக் கொண்டு வருவதாகத் தன் தந்தையிடம் கூறியிருந்தான்.

ஈதியசு கடற்கரையோரமாக இருந்த மலைமுகட்டின் மீதிருந்து தன் மகனுடைய கப்பலில் வெள்ளிப் பாயல் காணப்படுகிறதா என்று எதிர் நோக்கிக் கொண்டேயிருந்தான். ஆனல் அவன் தனது மகனுடைய கப்பலின் மீது கரிய பாய் விரிக்கப்பட்டிருப்பதைக் கண்டதும் தன் மகன் இறந்துபட்டான் என நினைந்தான். அவ்வருத்தம் தாங்க மாட்டாமல் ஈதியசு கடலில் விழுந்து மாண்டான்.

தீசியசு தன் நாடு திரும்பியதும் தன் தந்தை இறந்தது கேட்டுப் பெருந்துயரில் மூழ்கினன்.

உள்ளத்தில் ஏற்படும் துன்பமாகிய நோய்க்குக் காலமே தக்க மருந்து. காலம் கடந்தது; தீசியசின் வருத்தம் ஒருவாறு நீங்கிற்று.

தீசியசு தன் தந்தைக்கு ஆற்றவேண்டிய கடன்களை ஆற்றிய பின் ஏதென்சு நகர வேந்தனாக முடி சூட்டிக்கொண்டான். மன்னனையே இவ்வுலகம் உயிராகக்கொண்டு விளங்குகிறது என்று உலகமே போற்றும்படியாக அவன் நெடுங்காலம் ஆட்சி புரிந்து வந்தான்.

## கட்டுரைக் குறிப்பு

I மினோத்தாரின் முடிவு.

1. முன்னுரை. 2. மீனாசின் பேரவை. 3. மன்னனுடன் உரையாடல். 4. அரியதேனின் அன்பு. 5. மினோத்தாரைக் காணல். 6. இறுதி வெற்றி. 7 முடிவுரை.

II தீசியசு மன்னனாதல்.

1. முன்னுரை. 2. மீட்சி. 3. தீசியசு உறுதிமொழியை மறத்தல். 4. ஈதியசின் இறுதி. 5. ஏதென்சில் நல்லாட்சி. 6. முடிவுரை.

---

## அருஞ்சொற் பொருள்

இயல்–1. வானளாவி—வானத்தைத் தொட்டு; அருமருந்தன்ன—அரிய மருந்தைப்போல; கோட்டம்—கோவில்; புதிர்—வியப்பு; கா—காடு; மல்கிற்று — நிறைந்தது; கூம்பி — வாடி; ஏறுதழுவுதல்—காளையை மடக்குதல்; அடிபுதை அரணங்கள்-செருப்புகள்; கரந்து—மறைத்து; அந்திவண்ணம்—செந்நிறம்; ஆநிரை—பசுக் கூட்டம்; பொற்பாதுகை—பொன்னாலாகிய செருப்பு; ஊழ்—முன் வினையின் விளைவு.

இயல்-2. விழைந்தான் — விரும்பினன்; தளை—பிணிப்பு; அகிலம்—உலகம்; ஒறுக்கவேண்டும்—தண்டிக்கவேண்டும்; நில இணைப்பு—Isthmus; சூளுரை—சபதம்; மிளிர்ந்தது—விளங்கித் தோன்றியது; ஞாயிறு—சூரியன்; மருத நிலம்—வயலும் வயல்சார்ந்த இடமும்; மஞ்சு—பனிப் புகை; முகில்—மேகம்; பீடு—பெருமை; மறமாண்பு—வீரத்தின் பெருமை; கையுறை—பரிசு.

இயல்-3. அணங்குகளே—தெய்வப் பெண்களே; சென்னியுற—தலைதாளிலே படும்படியாக; வென்றி—வெற்றி.

இயல்-4. குருதி—இரத்தம்; புக்கு—புகுந்து; வேழம்-யானை; நிவந்து—நிமிர்ந்து.

இயல்-5. ஐயப்பாடு — சந்தேகம்; அருளாளன் — இரக்கமுள்ளவன்; வணிகச்சாத்து—வணிகக்குழு; மூப்பு—முதுமை; அவலம்—வருத்தம்.

இயல்-6. வெளவுதல்—கவர்தல்; வெருவி—அஞ்சி; கார் காலம்—மழைக்காலம்; கொல்லேறு—சல்லிகட்டுக்காளை; குறும்பர்—குறும்பு செய்பவர்; எள்ளல்—இகழ்தல்; துணுக்கம் — அச்சம்; ஏந்திழை — அணிகலன்கள் அணிந்த பெண்.

இயல்-7. நுண்மாண் நுழைபுலம்—நுண்ணிய மாண்புமிக்க ஆராயும் அறிவு; ஒருதலை—திண்ணம்; குடவோலை—சீட்டு மூலம் தேர்ந்தெடுத்தல்.

இயல்-8. மருட்கை—மருளுதல்; நம்பியர்—இளைஞர்; போழ்ந்தான்—பிளந்தான்.

---

